



# லக்ஸ் டாய்லட் சோப்பினால் கண்ணாம்பா

## தினந்தோறும் அழகுபடுத்திக்கொள்ளும் முறை இதுவே




☆ சினிமா நட்சத்திரங்கள் விரும்பும் அழகையளிக்கும் சோப் ☆










கண்ணாம்பாவிற்கு, அவருடைய அருமையான சருமத்தை குளுமையாகவும், அப்பழுக்கற்றதாகவும் செய்துகொள்ள ஒழுங்கான பாதுகாப்பு அவசியம் என்பது தெரியும். நீங்களும் உங்கள் சருமத்தை சீர்படுத்துவதில சிரத்தையெடுத்துக கொள்ளுகிறீர்களா? இந்த சுலபமான அழகுபடுத்திக் கொள்ளும் முறையை 30 நாட்கள் கையாளுங்கள். இவ்வெண்மையான, நுரைத்த சோப்பின் குளிர்ந்த பரிமளத்தை நீங்கள் விரும்புவீர்கள். மேலும், இதன் தாராளமாயுண்டாகும் நுரை உங்கள் சருமத்தை சுத்தமாக்கி பளபளப்பை யளிக்கும். உங்கள் சருமத்திற்கு அதற்கு வேண்டிய பாதுகாப்பை யளியுங்கள். உண்மையான அழகையளிக்கும் லக்ஸ் டாய்லட் சோப்பைப் பயன்படுத்துங்கள்.

LTS. 152-23-40 TM — LEVER BROTHERS (INDIA) LIMITED

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 6 இதழ் 39 | 1947 ஏப்ரல் 27 | சர்வஜித்து சித்திரை 14




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

நிகழ்ச்சிச் சித்திரம் -சாஸ்திரி

1940

1940-ல் ஜனாப் ஜின்னா இந்தியா தேசத்தை மூன்று துண்டாகக் கத்தரிக்க வேண்டும் என்ற கிளர்ச்சியை ஆரம்பித்தார். அதன் பலனாக.....

1947

...1947-ல் பஞ்சாப் மாகாணத்தையும் வங்காள மாகாணத்தையும் இரண்டாகத் துண்டிக்க வேண்டும் என்னும் கிளர்ச்சி எழுந்திருக்கிறது

பஞ்சாப்




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 39

# என்ன சேதி?

## சிரிப்பு எதற்கு?

பிரதம மந்திரி ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியார் கேள்விகளுக்குத் தாமே ஏன் பதில் சொல்லக் கூடாது என்று சில அங்கத்தினர் கேட்டார்கள். அவர்களுடைய விருப்பத்துக் கிணங்கப் பிரதம மந்திரி தாமே பதில் சொல்ல ஆரம்பித்தார். சில கேள்விகளுக்குத் தமிழிலே பதில் சொன்னார். பிரதம மந்திரியின் தமிழ்ப் பதில்களைக் கேட்டுவிட்டு ஓர் அங்கத்தினர் தாமும் தமிழிலேயே உப கேள்வி கேட்டாராம். இது சட்டசபையில் சிரிப்பை உண்டாக்கிற்றாம்.

சிரிப்பு என்னத்திற்காக என்பது அவ்வளவு தெளிவாக விளங்கவில்லை.

எத்தனையோ காலமாகக் கேள்விகளுக்கு ஆங்கிலத்தில் பதில் சொல்லப்பட்டு வந்தது. ஆங்கிலம் தெரியாத அங்கத்தினர்கள் எல்லாரும் வாயைப் பிளந்து கொண்டு சும்மா இருந்தார்கள். அப்போதெல்லாம் யாரும் சிரிக்கவில்லை; தமிழில் மொழி பெயர்க்கும்படியும் கேட்கவில்லை.

ஆனால் தமிழிலே சொல்லும் பதில்களுக்கு ஆங்கில மொழி பெயர்ப்பு வேண்டும் என்கிறார்கள். தமிழைக் கேட்டே சிலர் சிரிக்கவும் சிரிக்கிறார்கள்.

ஆனால், கூடிய சீக்கிரம் ஒருகாலம் வரும். சட்டசபை முதலிய பொது ஸ்தாபனங்களில் தமிழில் பேசுவதே இயற்கையாயிருக்கும். இங்கிலீஷில் யாராவது பேசினால் அதைக் கேட்டுச் சிரிக்கும் நிலைமை ஏற்படும்! அந்த நிலைமை ஏற்படுவதற்கு அடிகோலும் ஸ்ரீ ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரை வாழ்த்துகிறோம்.

## பொய்யாக்கினார்!

ஏறக்குறைய இரண்டு வருஷத்துக்கு முன்னால் தொழிற்கட்சி சர்க்கார் பதவிக்கு வந்து, லார்ட் பெதிக் லாரென்ஸ் இந்தியா மந்திரியானபோது, இந்திய மக்களுக்கு அவர்மீது அப்படி ஒன்றும் பிரமாதமான அபிப்பிராயம் ஏற்படவில்லை. "ஏதோ ஒரு கிழவர் வந்திருக்கிறார். இவரும் மற்ற இந்தியா மந்திரிகளைப் போல இந்திய சுதந்தரத்துக்கு என்னென்ன முட்டுக் கட்டைகள் போட வேண்டுமென்று நினைக்கிறாரோ, அதையெல்லாம் போட்டு விட்டுப் போகட்டும், புண்ணியவாளன்!" என்று தான் கருதினார்கள்.

ஆனால், என்ன அதிசயம்! அந்தக் கிழவர் எல்லோரையுமே ஏமாற்றி விட்டார்! இரண்டு வருஷத்துக்குள்ளாக எத்தனையோ பெரிய அரசியல் மாறுதல்களையெல்லாம் செய்து விட்டு இப்போது பதவியிலிருந்து விலகியிருக்கிறார். இந்தியா இன்று ஏறக்குறைய சுதந்திர நாடு. 1948ம் வருஷம் ஜூன் மாதம் பரிபூரண சுதந்திர நாடாகி விடும். இதற்குக் காரணம் பெதிக் லாரென்ஸேயாகும். சொன்னதைச் சொன்னபடியே செய்து காட்டிய தீர புருஷர் இந்தியா மந்திரிகளுக்குள்ளே அவர் ஒருவரே என்று சொல்லலாம்.

லார்ட் பெதிக் லாரென்ஸ், தம்முடைய முதுமைப் பருவத்தின் காரணமாக ஓய்வு எடுத்துக் கொள்ள விரும்பிப் பதவியை ராஜிநாமாச் செய்திருக்கிறார்.

பெதிக் லாரென்ஸ் தாம் செய்ய வேண்டிய காரியத்தை — எந்த லட்சியத்துடன் அவர் பதவிக்கு வந்தாரோ அந்த லட்சியத்தை - சாதித்து விட்டார். சென்ற நூற்றைம்பது வருஷகாலமாக பிரிட்டிஷ்காரர்கள் சாதிக்க முடியாத ஒரு பிரம்மாண்டமான காரியத்தைச் சாதித்த பிறகு, அவர் ஓய்வு எடுத்துக்கொள்ளத் தானே வேண்டும்?

லார்ட் பெதிக் லாரென்ஸ் நன்றாக ஓய்வு எடுத்துக் கொள்ளட்டும்! இந்திய மக்களின் புகழுக்கும் நன்மதிப்புக்கும் பாத்திரமான அவர் தீர்க்காயுசாக வாழ்ந்து தம்முடைய ஓய்வை நன்றாக அனுபவிக்கட்டும்!

புதிய இந்தியா மந்திரி லார்டு லிஸ்டோவெல் துரையும் கூடிய சீக்கிரத்தில் ஓய்வு பெறும் முறையில் காரியத்தை நடத்துவார் என்று எதிர்பார்க்கிறோம்.

## நேருவின் எச்சரிக்கை.

**ம**னதில் ஒன்றை வைத்துக் கொண்டு வெளியில் ஒன்றைப் பேசும் வழக்கம் நம்முடைய பண்டித ஜவாஹர்லால்ஜி அவர்களிடம் கொஞ்சமும் கிடையாது என்பது எல்லோருக்கும் நன்றாகத் தெரியும். ஒரு முறை பண்டித நேருவைக் கடுமையாகத் தாக்கி ஒரு ஆங்கிலப் பத்திரிகையில் ஒரு கட்டுரை வந்தது. அது பண்டித நேருவே "புனை பெய"ரில் எழுதியது என்பதைக் கண்டு பிடிப்பதற்கு வெகு காலமாயிற்றாம்! தேசத்துக்குப் பாதகமான காரியங்களை யார் செய்த போதிலும் படார் படார் என்று மனம் விட்டுச் சொல்லி விடுவது பண்டித ஜவாஹர்லால்ஜியின் வழக்கம்.

சமீபத்தில் குவாலியரில் நடந்த சமஸ்தான மக்கள் மகாநாட்டிலே, தேசத்துக்குப் பாதகம் விளைவிக்கும் சமஸ்தானாதிபதிகளுக்குப் பண்டித நேரு விடுத்திருக்கும் ஓர் எச்சரிக்கை, நேருஜியின் மேற்படி கள்ளங்கபடற்ற மனப்பான்மைக்கும் தீரத்துக்கும் ஓர் உதாரணமாகும். சில சமஸ்தானங்கள் மதில்மேல் பூனையாக இருந்து "அரசியல் நிர்ணய சபையில் சேரலாமா வேண்டாமா? எப்போது சேர்ந்தால் எவ்வளவு லாபம் கிடைக்கும்?" என்று சதியாலோசனை செய்துகொண்டிருக்கின்றன அல்லவா? அந்த சமஸ்தானங்கள் இப்போதே அரசியல் நிர்ணய சபையில் சேராவிட்டால் பின்பு அவை இந்தியாவின் விரோதி நாடுகளாகக் கருதப்படும் என்று நேருஜி மேற்படி மகாநாட்டிலே பட்டவர்த்தனமாகச் சொல்லியிருக்கிறார்.

நேருஜி சொல்லுவதிலே தவறு என்ன இருக்கிறது? இத்தனை வருஷ காலம் நாம் பிரிட்டிஷ்காரர்களுக்குக் கீழே அடிமைகளாக இருந்தோம். இப்போது, பல போராட்டங்களுக்கும் எண்ணற்ற தியாகங்களுக்கும் பிறகு விடுதலையடையக் கூடிய நிலைமையில் இருக்கிறோம். இந்தச் சமயத்திலே எல்லோரும் அரசியல் நிர்ணய சபையிலே சேர்ந்து சுதந்திர அரசியலை வகுப்பதற்குப் பதிலாக முட்டுக்கட்டை போடும் சமஸ்தானங்களை விரோதி நாடுகள் என்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது?

அவை இந்தியா தேசத்துக்கு விரோதி என்பது மட்டுமல்ல; தங்களுக்கே விரோதி என்று சொல்வதும் மிகையாகாது. அவை இந்தியாவோடு சேராமல் தனிச் சுதந்திரமாக வாழ நினைக்கும் சுதேச சமஸ்தானங்கள் 1948-ஜூன் மாதத்துக்குப் பிறகு மூன்றே முக்கால் நாழிகைகூடத் தங்கள் தனிச் சுதந்திரத்தை நிலைநாட்டிக்கொள்ள முடியாது என்று நிச்சயமாய்ச் சொல்லலாம்.

வைஸ்ராய் மவுண்ட் பாட்டன் செய்யத் தொடங்கி யிருக்கும் சமரச முயற்சியின் முதற் பலனாக மகாத்மா காந்தியும் குவாதே ஆஜம் ஜின்னாவும் கையெழுத்திட்டுச் சாந்தி விண்ணப்பம் வெளியாகி யிருக்கிறது.

# குமரியும் குன்றமும்

ஓர் ஊரில் குறி தவறாமல் அம்பு எய்வதில் மகா நிபுணனான ஒருவன் இருந்தான். ஒருவருடைய உச்சந் தலையில் ஓர் எலுமிச்சம் பழத்தை வைத்து, அவன் வெகு தூரத்திலிருந்து அம்பு எய்வானாயின், எலுமிச்சம் பழம் இரண்டாகத் துணிக்கப் பட்டு அப்பால் போய் விழும். அதை உச்சந் தலையில் வைத்துக் கொண்டிருந்தவருக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது.

அவன், இதுபோல் மயிர்க் கூச்சு எடுக்கும் மற்றும் பல அற்புத சாகஸங்களையும் ஒரு முறைகூடத் தவறாமல் வெற்றிகரமாகச் செய்வதில் கை தேர்ந்தவன்.

ஒரு நாள் ராஜ சபையில் அவன் தனது சாகஸ வேலைகளைக் காட்டிக் கொண்டு வந்தபோது, எலுமிச்சம் பழத்தைத் துணிக்கும் கட்டம் வந்தது.

சபையிலிருந்த பிரமுகர்களில் ஒருவர், அங்கிருந்த அந்த நிபுணனின் மகனையே அழைத்து வந்து, அவன் தலையில் எலுமிச்சம் பழத்தை வைத்து, அதைத் துணிக்கும்படி நிபுணனிடம் கூறினார்.

நிபுணன் அப்படியே சிறிது நேரம் பிரமித்து நின்று விட்டான்.

அவனுக்கு அதுவரை அத்தகைய அனுபவம் ஏற்பட்டதில்லை.

யாராவது முகம் தெரியாத ஒருவர் தலையில் பழத்தை வைத்தே அவன் துணிப்பது வழக்கம். எனவே, அதற்கு மாறாக, அவன் தன் சொந்த மகனின் தலை மீதுள்ள பழத்தைத் துணிக்க வேண்டுமென்று கட்டளை யிடப் பட்டதும் தயங்கித் தடுமாறி விட்டான்.

மகன் மீதுள்ள பாசமானது அவனுடைய தைரியத்தையும் நிதானத்தையும் நிலை குலைத்து விட்டது. அவனது கைகள் நடுங்கின. குறியும் தவறியது.

மகன் பிழைத்து வீடு வந்ததே பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது!

குறிப்பிட்ட நபர், அல்லது வஸ்துவின் மீதுள்ள பாசமானது, மனிதனை அவ்வாறு நிலைகுலைந்து நிதான புத்தியை இழக்கும்படி செய்து விடுகிறது.

இப்போது நமது ஆந்திர சகோதரர்களில் சில பிரமுகர்களைப் பாருங்கள்.

ஆந்திரப் பிரதேசத்தைத் தனி மாகாணமாகப் பிரிக்க வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்துகிறார்கள்.

அது ரொம்ப சரி.

அவ்வாறு பிரிப்பது ஆந்திரர்களுக்கு நல்லதுதான். அவ்விதம் பிரிப்பதால் தமிழர்களுக்கு இரண்டு மடங்கு அதிக நன்மை யாதலால், ஆந்திரா பிரிவினையை எதிர்க்கும் தமிழர் ஒருவர்கூட இருக்க மாட்டார் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

ஆனால் ஆந்திர மாகாணத்திலுள்ள பாசமானது, சில ஆந்திரப் பிரமுகர்களை நிதான புத்தியை இழக்கும்படி செய்யும்போதுதான், தகராறுகளுக்கும் ஆட்சேபனைகளுக்கும் இடமேற்படுகிறது.

சமீபத்தில் நடந்த ஆந்திர மகா சபையின் விசேஷ மகாநாட்டில், ஆந்திரா பிரிவினை விஷயமாக வெகு காரசாரமாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

பாஷாவாரியாக மாகாணங்களைப் பிரிக்க வேண்டும் என்பது ஏற்கெனவே காங்கிரஸால் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும்.

எனவே, அதை யாரோ எதிர்ப்பது போல் ஆந்திரர்கள், ஆவேசங் கொண்டு பேச வேண்டிய அவசியமே யில்லை.

ஆந்திரா பிரிவினை சிறிது கால தாமதமானாலும், இடைக்கால ஏற்பாடாகத் தனி மந்திரி சபையும் பட்

ஜெட்டும் வேண்டுமென்று சில ஆந்திரப் பிரமுகர்கள் துடிக்கின்றார்கள்.

இதையும் தமிழ்நாட்டார் வரவேற்பார்களேயன்றி, ஆட்சேபிக்க மாட்டார்கள்.

ஏனெனில், அவ்வாறு ஏற்படுவதால் தமிழ்நாட்டுக்கு லாபமே ஒழிய நஷ்டம் எதுவுமில்லை.

தன் அபிவிருத்திக்காக ஆந்திரர்களிடமிருந்து வருமானத்தை எதிர்பார்க்கக் கூடிய துர்ப்பாக்கிய நிலைமையில் தமிழ்நாடு இல்லை என்பதை, நிதான புத்தியை இழக்காத ஆந்திரர்கள் அங்கீகரிப்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

எதிர்காலத்தில் ஏற்படவிருக்கும் தங்கள் மாகாணத்தின் மீதுள்ள பாசத்தினால் ஆந்திரப் பிரமுகர்கள் தங்கள் மாகாண எல்லையைக் குறித்தும் விசித்திரமான யோசனைகளைக் கிளப்பும்போதுதான், அவர்களுடைய கூற்றைத் தமிழ் நாட்டார் கண்டிக்காமலிருக்க முடியவில்லை.

இவ் விஷயத்தில் பிரகாசம்காரு போன்றவர்கள் கூட விநோதமான முறையிலேயே பேசுகின்றனர்.

பழைய சரித்திரத்தைப் புரட்டிப் பார்ப்பவர்கள் சென்னைமா நகர் ஆந்திரர்களின் பிதுரார்ஜித சொத்து என்பதை அறிந்து கொள்வார்கள் என்றும், ஆந்திர தேசத்தைச் சேர்ந்த ஒரு பெரிய ராஜா சென்னையை பிரிட்டிஷாருக்குத் தானம் செய்தார் என்றும் ஆந்திர கேசரி பிரகாசம்காரு கூறுகிறார்.

சென்னை நகரமும், மற்றும் சில பாகங்களும் தமிழ் நாட்டிலிருந்து பிரிக்கப்பட வேண்டுமென சர் பி. என். ராவ் ஒரு அரிய பெரிய அபூர்வ 'திட்டம்' போட்டிருக்கிறாராம்.

மேற்படி அர்த்தமற்ற, ஆதாரமற்ற கூற்றுக்களையெல்லாம் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கண்டித்திருப்பதைக் குறித்து சந்தோஷமடைகிறோம்.

* * *

வடக்கே திருவேங்கடம், தெற்கே கன்னியா குமரி:

இதுதான் தமிழ்நாட்டின் எல்லை.

சரித்திர ரீதியாகவும், சம்பிரதாய ரீதியாகவும், கர்ண பரம்பரை ரீதியாகவும் இதற்கு எத்தனையோ ஆதாரங்கள் எடுத்துக் காட்ட முடியும்.

அப்படியிருக்க, தமிழருக்குச் சொந்தமான சென்னையை ஆந்திர கேசரிகள் பாக்கிஸ்தான் செய்ய முயற்சிப்பதைத் தமிழ் மகா ஜனங்கள் எக்காலத்தும் அனுமதிக்க மாட்டார்கள்.

இவ் விஷயமாக ஆந்திரப் பிரமுகர்கள் புதிய பிரச்னை எதையும் கிளப்பி அதிகக் குழப்பத்தை உண்டு பண்ணாமல் இருப்பதே புத்திசாலித்தனமாகும்.

அதை யொட்டி ஸ்ரீ காளா வெங்கடராவ் கூறியுள்ள யோசனை மிகவும் போற்றத் தக்கது.

அதாவது ஆந்திரம், கேரளம், கர்நாடகம் முதலிய பாஷாவாரி மாகாணங்களுக்கு எல்லைகள் வகுக்கும் விஷயத்தை, அரசியல் நிர்ணய மகா சபையால் நியமிக்கப்படும் எல்லை நிர்ணய கமிஷனின் முடிவுக்கு விட்டு விடுவதே சிறந்ததென்று அவர் கூறுவதை யாரும் ஆட்சேபிப்பதற்கில்லை.

அவ்வாறு செய்வதால் அனாவசியமான மனக் கொதிப்புக்கும், வாதப் பிரதி வாதங்களுக்கும், தகராறுகளுக்கும் இடமிராது.

சென்னையைப் பிளக்க வேண்டும் என்று கூறுவது நியாயமல்லவென்று சில மாதங்களுக்கு முன் விஜயநகரம் சர் விஜயா ஆந்திரர்களுக்குக் கூறியுள்ள புத்திமதியையும் இச் சந்தர்ப்பத்தில் ஞாபக மூட்டுகிறோம்.

எது எப்படியாயினும் கன்னியா குமரியும் வேங்கடகிரியும் தமிழ் நாட்டின் இயற்கையான எல்லைகள் என்பதை இனிப் பிரம்மதேவனாலும் அசைக்க முடியாது.

* * *

“போலீஸ் இலாகா எதற்காக? அதை எடுத்து விட வேண்டும். மகாத்மா காந்தியின் சாத்வீகக் கொள்கைக்கு அது முற்றிலும் முரணானது. ஆகையால், போலீஸ் இலாகாவை இன்னும் எடுக்காமல் வைத்துக் கொண்டிருப்பது மகா பாவம். இதை சர்தார் பட்டேலும் இந்திய சர்க்காரும் நன்கு உணர்ந்து உடனே அந்த இலாகாவை ரத்து செய்வதற்குரிய முறைகளைக் கைக் கொள்ள வேண்டும். இல்லேல் நான் உயிர் துறக்கும் வரையில் உண்ணாவிரதம் ஆரம்பிக்கப் போகிறேன் என்பதை

உலகம் அறியப் பறை சாற்றுகின்றேன்.''

இவ்வாறாக ஒரு பிரகஸ்பதி தண்டோரா போடுகிறார் என்று வைத்துக் கொள்ளுவோம்.

அவரைப் பற்றி என்ன நினைப்பது?

அவருடைய தேசபக்தியும் மூளையின் ஓட்டமும் கட்டுக்கு அடங்காமல் கரை கடந்து விட்டன என்றுதான் நினைக்க வேண்டியிருக்கும்!

* * *

இலட்சியம் உயர்ந்ததாக இருக்கலாம். ஆனால், அதில் உடனே சித்தி பெறுவது அனுபவ சாத்தியமா என்பதை யோசிக்க வேண்டும்.

அனுபவ சாத்தியமா என்பதுபற்றிச் சிறிதும் யோசியாமல், யாராலும் செய்ய முடியாத காரியத்தைத் தாம் செய்து 'சர்டிபிகேட்' பெறவேண்டும் என்று நினைப்பவர்களால் உருப்பட்ட முறையில் எதையும் சாதிக்க முடியாது.

அத்தகையோரால் அனுகூலம் ஏற்படாதது ஒருபுறமிருக்க, பிரதிகூலங்களும் அதிகமாகி விடும்.

அவ்வாறு சென்னை மாகாணத்துக்கு ஏற்படவிருந்த ஒரு மகத்தான பிரதிகூலம், சென்னை சட்டசபை காங்கிரஸ் கட்சி இவ்வாரம் நிறைவேற்றியுள்ள ஒரு தீர்மானத்தின் பலனைத் தவிர்க்கப்பட்டிருக்கிறது.

அதாவது, சென்னை மாகாணத்துக்கு என்று இந்திய சர்க்காரால் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த மில் கதிர்களை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்றும், அவ் விஷயமாக இந்திய சர்க்கார் வற்புறுத்தினால் அவர்களை எதிர்த்து நின்று போராடவும் தயார் என்றும் பிரகாசம்காரு தடபுடல் செய்து வந்தார்.

மாகாண சர்க்கார் உரிமையில் இந்திய சர்க்கார் அவ்வாறு தலையிடுவது சுதந்திர தர்மத்துக்கே முரணானது என்றும் கூறினார்.

மற்றும் அவ்வாறு செய்வதால் கதர் அபிவிருத்திக்கு ஆபத்து ஏற்பட்டுவிடும் என்றும் பயமுறுத்தினார்.

பொறுப்பற்ற மந்திரிகள் அடங்கிய பழைய இந்திய சர்க்கார் காலத்தில், மாகாண சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காகப் பிரகாசம்காரு அவ்வாறு ஆர்ப்பாட்டம் செய்வதாயின், அதற்கு அர்த்தம் உண்டு.

ஆனால், அகில இந்தியாவின் சுதந்திரத்துக்காக அல்லும் பகலும் உழைத்து வரும் கர்மயோகிகளான நேருஜி, சர்தார், ஆஸாத், ராஜாஜி, ராஜேந்திர பாபு முதலியவர்கள் அடங்கிய இந்திய சர்க்கார், மாகாண சுதந்திரத்தில் தலையிடாமல் பாதுகாக்க வேண்டும் என்று பிரகாசம்காரு இன்னும்கூடக் கூறிவருவதை என்னவென்று வர்ணிப்பது?

கதர் அபிவிருத்தியில் அவர்களைக் காட்டிலும் தமக்குத்தான் அதிக சிரத்தை உண்டென்று பிரகாசம் அவர்கள் கூறுவாராயின், அதை அவரது மனச்சாட்சிகூட ஒப்புக் கொள்ளாதென்பது திண்ணம்!

பிரகாசத்தின் அர்த்தமற்ற மில் ஒழிப்புக் கொள்கைக்கு முற்றுப் புள்ளி வைத்ததுடன் கதர் அபிவிருத்தி திட்டத்தைத் தீவிரமாகக் கைக் கொள்ளுவதென்றும் புதிய மந்திரி சபை முடிவு செய்திருக்கிறது. எனவே, அவ்விஷயத்தில் புதிய மந்திரிகளுக்கு உள்ள சிரத்தை, பிரகாசம்காருவுக்கு உள்ள சிரத்தைக்கு எள்ளளவும் குறைந்த தல்லவென்பது வியக்தமாகின்றது.

தமது மில் ஒழிப்புக் கொள்கைக்கு மகாத்மா காந்தியின் ஆசீர்வாதம் இருப்பதாக முன்பு பிரகாசம்காரு கூறினார்.

ஆனால், அதற்கு முதலில் பொது ஜன ஆதரவைப் பெற்றுத்தான் தீர வேண்டும் என்பது காந்திஜியின் நிபந்தனை என்பதை பிரகாசம்காரு கூறாமல் மறைத்து விட்டாரென்பதையும் இச் சந்தர்ப்பத்தில் வாசக நேயர்களுக்கு ஞாபக மூட்ட விரும்புகிறோம்.

போதிய உடையின்றி ஏழை மக்கள் அவஸ்தைப்பட்டு வரும் சமயத்தில், மாஜி பிரதம மந்திரி மில் ஒழிப்புக் கொள்கையை நிறைவேற்ற முற்பட்டதைக் காட்டிலும் சந்தர்ப்பப் பொருத்தமற்ற காரியம் வேறெதுவும் இருக்க முடியாது.

இவ்வாறாக, புதிய மந்திரிகள் புதிய ஆக்க வேலைகளில் ஈடுபடு முன் பழைய ஆட்சியில் நிகழ்ந்த ஊழல் வேலைகளுக்கு ஒவ்வொன்றாக முற்றுப் புள்ளி வைக்க வேண்டியிருக்கிறது.

# அபலையின் கண்ணீர்

## கல்கி

### இரண்டாம் பாகம்

போலீஸ் குண்டாந்தடிகளும், மற்றும் பலவிதப் போலீஸ் தண்டனைகளும், பொதுக் கூட்டத்தில் விழுந்த மலைப் பிஞ்சுகளும் செய்ய முடியாத காரியத்தை ஒரு அபலைப் பெண்ணின் கண்ணீர் செய்துவிட்டது. சிவராஜ் பதறிப் போய்விட்டான். நாற்காலியிலிருந்து பரபரப்புடன் எழுந்து நின்றான். சிறிது நேரம் பேச முடியாமல் தத்தளித்தான். பிறகு, தட்டுத் தடுமாறி, "வா, அம்மா! ஏன் வாசற்படியிலேயே நிற்கிறாய்? உள்ளே வந்து உட்கார்! இந்தக் கடிதம் எழுதினது நீதானா?" என்றான்.

வந்தவள் பீதி நிறைந்த கண்களினால் அப்படியும் இப்படியும் பின்னால் தான் வந்த மச்சுப் படியிலும் பார்த்து விட்டு, "ஆம், ஐயா! நான்தான்!" என்று விம்மலுடன் கலந்த வார்த்தைகளைக் கூறினாள்.

"எதற்காக இப்படிப் பயப்படுகிறாய்? யார் உன்னை என்ன செய்து விட முடியும்? நான் இருக்கிறேன்; நீ பயப்பட வேண்டாம்!" என்று சிவராஜ் அவளுக்குத் தைரியம் கூறினான்.

"தங்களுடைய கையில் என் கடிதத்தைப் பார்த்தவுடனேயே பாதி பயம் எனக்குப் போய்விட்டது! இனிமேல் எனக்கு என்ன கவலை?" என்று வந்தவள் கொஞ்சம் தைரியத்தை வருவித்துக் கொண்டு சொன்னாள்.

"அதுதான் சரி, தமிழ் நாட்டு வீரப் பெண்களைப் பற்றி நீ படித்ததில்லையா? மகாத்மா காந்திகூடப் பெண்கள் பயப்படவே கூடாது என்று சொல்கிறார்..."

"ஆ! மகாத்மா சொல்வதற்கென்ன? என்னுடைய நிலையில் அவர் இருந்து பார்த்தால் அல்லவா தெரியும்?"

இந்தப் பேச்சு சிவராஜுக்குப் பிடிக்கவில்லை. "அது போகட்டும்; உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"என் பெயர் பார்வதி!" என்று சொன்னாள் அந்த அபலைப் பெண்.

சிவராஜுக்கு உடனே, "திக்கற்ற பார்வதி" என்னும் கதை நினைவுக்கு வந்தது. அவளைப் போல் இவளும் ஒரு திக்கற்ற பெண்போலும். ஆனால் அந்தப் பார்வதிக்கு நேர்ந்த கதி இவளுக்கு நேரிடாது; ஒரு நாளும் நேராது. இவளைக் காப்பாற்றுவதற்குத்தான் நாம் இருக்கிறோமே? நம்முடைய உடம்பில் உயிர் இருக்கும் வரையில் இவளை நாம் காப்பாற்றியே தீர வேண்டும். அப்படி நமக்கு ஏதாவது ஆபத்து வருவதாயிருந்தால்கூட இந்தப் பெண்ணைக் காப்பாற்றும்படியாக இன்ஸ்பெக்டர் தனராஜிடம் வாக்குறுதி வாங்கிக் கொள்ள வேண்டும்.

"பார்வதி! நீ எந்த ஆபத்துக்காகப் பயப்படுகிறாய்? உன்னைத் தொந்தரவு செய்கிறவன் யார்? தைரியமாய்ச் சொல்லு! அவன் யாராயிருந்தாலும் எப்பேர்ப்பட்ட பெரிய மனிதனாயிருந்தாலும் நான் சும்மா விடப் போவதில்லை. எப்பேர்ப்பட்ட மலையான பலவானாயிருந்தாலும் ஒரு கை பார்த்து விடுகிறேன்......"

பார்வதியின் கண்கள் அகன்று விரிந்தன. அவளுடைய அழகிய செவ்விதழ்கள் சிறிது பிரிந்து நின்று அளவில்லாத ஆச்சரியத்தைக் காட்டின.

"உங்களுக்குத்தான் நான் சொல்லாமலே தெரிந்திருக்கிறதே!" என்றாள்.

"என்ன தெரிந்திருக்கிறது?"

"என்னைக் கொடுமைப் படுத்துகிற ஆசாமியின் பெயர்தான்!"

"என்ன? என்ன?"

"ஆம், ஐயா! பகவதி முதலியார்தான்! அவருடைய துராசைக்கு நான் இணங்காவிட்டால் என்னை இந்த ஊரை விட்டுத் துரத்தி விடுகிறேன் என்று அவர்தான் சபதம் கூறியிருக்கிறார்."

அந்த வீட்டின் மேற் கூரை இடிந்து திடீரென்று சிவராஜின் தலையின் மேல்

விழுந்தது. அதாவது அப்படி அவனுக்குத் தோன்றியது. ஏனெனில் பகவதி முதலியாரைப் பற்றி அவ்வளவு நல்ல அபிப்பிராயம் அவன் வைத்திருந்தான். அந்த ஜில்லாவிலேயே கெடுதலான வழிக்குப் போகாத யோக்கியமான பெரிய மனிதர் அவர் ஒருவர் தான் என்று எண்ணியிருந்தான். அப்படிப்பட்டவர் உண்மையில் திக்கற்ற இளம் பெண்களைக் கெடுக்கும் பாவி என்று தெரிந்தபோது அவனுடைய நெஞ்சு விம்மியதில் வியப்பு ஒன்றுமில்லை யல்லவா?

“இப்படியும் உண்டா? என்னால் நம்ப முடியவில்லையே?” என்றான் சிவராஜன்.

“ஆம், ஐயா! ஏழை சொல் அம்பலம் ஏறுமா? பெரிய மனிதர்கள் சொல்வதைத் தான் நம்புவார்கள். தாங்கள் ஒருவராவது இந்த அநாதையின் துயரத்தைக் கேட்டு...” என்று சொல்லிக் கொண்டே திக்கற்ற பார்வதி கண்ணீர் பெருக்கினாள்.

அதைப் பார்த்ததும் சிவராஜனால் பொறுக்க முடியவில்லை.

“வருத்தப்படாதே, அம்மா! என்ன செய்ய வேண்டும் என்று சொல். என்னாலான உதவியைச் செய்யத் தயாராயிருக்கிறேன். இருந்தாலும் அவ்வளவு நல்ல மனிதரைப்போல் பாசாங்கு செய்கிறவர்......”

“ஐயா! வெறும் பேச்சு என்னத்திற்கு? நான் எவ்வளவு சொன்னாலும் நம்பிக்கைப் படாதுதான். நேரிலே ரூபித்தால்தான் நம்புவீர்கள். அப்படி ரூபிக்க நான் தயார். நான் எப்போது கடிதம் அனுப்பினாலும் அல்லது சொல்லி அனுப்பினாலும் தாங்கள் உடனே புறப்பட்டு வருவீர்களா?” என்று கேட்டாள் திக்கற்ற பார்வதி.

“கட்டாயம் வருகிறேன். வந்து, நீ சொல்வது உண்மையாயிருந்தால், அந்த ஆஷாடபூதிக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்!” என்றான் சிவராஜன்.

“சரி, ஐயா! நான் போய் வருகிறேன்!” என்று சொல்லிவிட்டுப் பார்வதி தன் கண்களில் ததும்பிய கண்ணீரைச் சேலைத் தலைப்பினால் துடைத்துக் கொண்டாள். உடனே மச்சுப்படி இறங்கும் வாசல் வழியாகக் கீழே இறங்கத் தொடங்கினாள். இறங்குவதற்கு முன்னால் கடைசியாக அவள் பார்த்த பார்வை சிவராஜனுடைய இருதய அந்தரங்கம் வரையில் புகுந்து சென்று, வார்த்தைகளினால் வர்ணிக்க முடியாத வேதனையை அளித்தது.

அன்று இரவு சிவராஜன் சரியாகத் தூங்கவில்லை. மறுநாள் முழுவதும் தூக்கமின்றி விழித்திருக்க வேண்டிவரலாம் என்பதை எண்ணித் தூங்குவதற்கு எவ்வளவோ பிரயத்தனம் செய்தான். பலிக்கவில்லை.

கண்களில் முத்தைப்போல் ஜொலித்த கண்ணீர்த் துளிகளுடன் கூடிய திக்கற்ற பார்வதியின் கபடமற்ற பால் வடியும் முகம் அவன் அகக் கண் முன்னால் அடிக்கடி தோன்றிக் கொண்டேயிருந்ததுதான். அப் பெண்ணை ஒரு வேளை சரியாக நடத்தவில்லையோ, அநாவசியமாக அவள் சொன்னதில் சந்தேகப் பட்டோமோ, அதனால் அவள் மனங் கசந்து திரும்பிப் போய்விட்டாளோ, மற்ற முட்டாள் மனிதர்களைப் போலவே தன்னையும் எண்ணிக் கொண்டு விடுவாளோ, தான் சரியாகப் பதில் சொல்லாதபடியால் வாழ்க்கையிலேயே வெறுப்படைந்து ஒரு வேளை ‘தற்கொலை’ ‘தற்கொலை’ செய்து கொண்டு விடுவாளோ என்று இப்படி எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி உள்ளத்தைப் புண்ணாக்கிக் கொண்டான். அப்படி அவள் தற்கொலை செய்துகொண்டால் அந்தப் பழி தன் தலைமேலேதானே சுமரும் என்று எண்ணியபோது அவன் உள்ளம் வெதும்பியது. படுக்கையிலே புரண்டு புரண்டு படுத்தும், அடிக்கடி எழுந்து அறைக்குள்ளேயே அங்குமிங்கும் நடந்தும் இரவை ஒருவாறு கழித்தான்.

பொழுது விடிந்ததும் ஓரளவு பிரமையும் தெளிந்தது. இந்தியா தேசத்தில் திக்கற்ற பார்வதியைப் போல் எத்தனையோ அபலைகள் கண்ணும் கண்ணீருமாய்க் காலம் கழிக்கிறார்கள்! அவர்களில் ஒருத்தியைப் பற்றி மட்டும் தன்னுடைய மனம் இவ்வளவு தூரம் கவலைப்படும்படி விட்டது பெரிய பிசகு. தேசத்தின் பொது நன்மைக்காகப் பாடுபட்டுக் கொண்டிருக்கும்போது, பெரிய பெரிய காரியங்கள் எல்லாம் செய்ய வேண்டியதாயிருக்கும்போது, கேவலம் ஒரு பெண்ணின் கண்ணீரைக் கண்டு மனந் தளர்ந்து முக்கியமான காரியங்களையெல்லாம் கைசோர விட்டு விடுவதா? கூடவே கூடாது. இவ்விதம் மனதை உறுதி செய்துகொண்டு சிவராஜ் வழக்கம் போலத் தன் காரியங்களில் ஈடுபட்டான். அந்த ஊரில் அவனுடைய தலைமையின் கீழ் வேலை செய்த தேசத் தொண்டர்கள் பலர் வழக்கம்போல் அன்றும் வந்து தாங்கள் செய்ய வேண்டிய காரியாதிகளை அவனிடம் தெரிந்து கொண்டு போனார்கள்.

மத்தியானம் அவன் சாப்பிடுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் இன்ஸ்பெக்டர் தனராஜ் வந்தார். "எனக்கு ஒன்றும் அவசரம் இல்லை, சிவராஜ்! நீ போய்ச் சாப்பிட்டுவிட்டு வா! சற்று நேரம் நான் 'ரெஸ்ட்' எடுத்துக் கொள்கிறேன்!" என்றார். "சரி" என்று சொல்லிவிட்டுச் சிவராஜ் ஓட்டலுக்குச் சாப்பிடப் போனான்.

அவன் போன பிறகு பக்க வாசற்படியில் நின்று இன்ஸ்பெக்டர் தனராஜ் சந்தின் இருபுறமும் பார்த்தார். ஒருவரும் இல்லை என்பதைத் தெரிந்து கொண்டு அறைக் குள்ளே மேஜை, அலமாரி முதலியவை களைத் திறந்தும், புத்தகங்களைப் பிரித்தும் உதறியும் பரிசோதித்தார். கடைசியில் அவர் தேடிய பொருள் கிடைத்தது. முதல் நாள் சாயங்காலம் சிவராஜ் தன் கையில் வைத்துக் கொண்டு திருப்பித் திருப்பிப் படித்த கடிதந்தான் அது. ஒரு தடவை அதைத் தனராஜ் அவசரமாகப் படித்து விட்டுத் தம்முடைய உள் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டார். பிறகு நாற்காலியில் சாவதானமாய்ச் சாய்ந்து கொண்டு மேஜையின் மேல் இரண்டு காலையும் தூக்கிப் போட்டுக் கொண்டு சிகரெட் குடிக்க ஆரம்பித்தார்!

சாப்பிட்டுவிட்டுத் திரும்பி வந்த சிவராஜ் மேற்படி நிலையில் இன்ஸ்பெக்டர் தனராஜைப் பார்த்தான். எதிர்ச் சுவரில் மகாத்மா காந்தி படம் மாட்டியிருக்கும் போது, தனராஜ் அப்படிக் காலை நீட்டி மேஜைமேல் போட்டுக் கொண்டு சுருட்டுப் பிடித்த காரியம் அவனுக்குக் கட்டோடே பிடிக்கவில்லை.

"என்ன, மிஸ்டர் தனராஜ்! ஏதாவது பேசவேண்டிய விஷயம் இருக்கிறதா?" என்று சற்றுக் கடுகடுப்பான குரலில் அவன் கேட்டான்.

"வேறு ஒன்றும் இல்லை. இன்று இராத்திரி விஷயந்தான்!" என்றார் தனராஜ்.

"அதுதான் பேசித் தீர்ந்த விஷயம் ஆயிற்றே? அதைப் பற்றி இன்னும் என்ன பேசுவதற்கு இருக்கிறது?"

"ஒன்றுமில்லை. ஆனால் இராத்திரி நீ கட்டாயம் வந்து விடுவாயல்லவா? அது இது என்று காரணம் சொல்லி என்னை 'டிராட்'டில் விட்டு விடாதே!"

"அவ்விதமெல்லாம் விடும் வழக்கம் எனக்குக் கிடையாது. அப்படியே நான் வராமற் போனால்தான் என்ன? உங்களாலும் உங்கள் போலீஸ் படையாலும் முடியாத காரியமா? வந்தால் வாயிலே



வைத்துக் கொள்ளுங்கள். வராவிட்டால் உங்களுடைய வேலையை நீங்கள் பாருங்கள்!''

தொண்டன் சிவராஜனுக்கும் இன்ஸ்பெக்டர் தனராஜனுக்கும் சிநேகிதம் ஆகி ஏறக்குறைய ஆறுமாத காலம் ஆகிறது. இவ்வளவு காலமும் இன்று போல் ஒரு தடவையாவது அவர்கள் இவ்வளவு கடுமையாகப் பேசிக் கொண்டதில்லை.

இன்ஸ்பெக்டர் தனராஜ் கொஞ்சம் நிதானித்து, ''சிவராஜ்! நேற்று முதல் ஏன் ஒருமாதிரி சிடு சிடுப்பா யிருக்கிறாய்? இன்று நாம் வலை விரிக்கப்போகிற ஆசாமி எப்பேர்ப்பட்டவன் என்று உனக்குத் தெரியாதா? என்ன வேலைத்தனம் செய்வானோ, எப்படி டிமிக்கி கொடுக்கப் பார்ப்பானோ சொல்ல முடியாது. ஒருவருக்கு இரண்டு பேராய் இருந்து யோசனை செய்து காரியத்தைத் தந்திரமாய் முடிக்கவேண்டும். இல்லாவிட்டால் ஒன்று கிடக்க ஒன்று நடந்து விடலாம். தெரிகிறதா? ஒருவேளை உனக்கு வர முடியாது என்று தோன்றினால் இப்போதே சொல்லிவிடு. இன்றைக்கு நிறுத்தி வைத்துவிட்டு இன்னொரு நாள் பார்த்துக் கொள்வோம்'' என்றார்.

இதற்குள் சிவராஜின் படபடப்பும் அடங்கி விட்டது. ''அதெல்லாம் ஒன்றுமில்லை, ஸார்! கட்டாயம் இன்று இராத்திரி போட்ட திட்டத்தை நிறைவேற்றி விடுவோம். பத்தரைக்கு வராவிட்டால் பதினொரு மணிக்குள்ளாவது அவசியம் வந்து விடுகிறேன். இன்று வரையில் நாம் போட்ட புரோகிராமை மாற்றியது கிடையாது. இன்றைக்கு ஏன் மாற்ற வேண்டும்? — உண்மையைக் கேட்பீர்களானால் சொல்லி விடுகிறேன். காந்தி மகாத்மாவின் படம் எதிரில் இருக்கும்போது நீங்கள் காலை நீட்டிப் போட்டுக் கொண்டு சுருட்டுப் பிடித்தது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால்தான் ஒரு மாதிரி கோபமாகப் பேசினேன்!'' என்றான்.

''ஓஹோ! இதுதானா? மன்னிக்க வேண்டும்; நான் செய்தது பிசகு தான். மகாத்மா படம் இருக்கிறதென்பதையே நான் கவனிக்கவில்லை. பெரியோர்களின் படத்தை இப்படிக் கண்ட இடத்தில் மாட்டக் கூடாது. என்னுடைய வீட்டில் பூஜை அறையில் வைத்திருக்கிறேன்'' என்றார் தனராஜ்.

பிறகு விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார். இவ்வளவு நேரம் அவர் ஏதேதோ பேசிக்கொண்டிருந்த போதிலும், சிவராஜின் மடக்கிய இடது கையினுள் ஒரு கடிதம் இருக்கிறதென்பதை அவருடைய கண்கள் கவனித்துக் கொண்டிருந்தன. மச்சுப்படி இறங்கிப் போலீஸ் ஸ்டேஷன் போய்ச் சேரும்வரை ''அந்தக் கடிதத்தில் என்ன செய்தி அடங்கி யிருக்கும்?'' என்று அவர் மனம் சிந்தித்துக்கொண்டிருந்தது. ''இவ்வளவு கெட்டிக்காரப் பிள்ளை கடைசியில் ஏதோ முட்டாள்தனத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறான். மொத்தத்தில் இன்றைக்குச் சகுனம் சரியா யில்லை. காரியம் சரிவர முடியப் போவதில்லை!'' என்று அவருடைய உள் மனம் சொல்லிக் கொண்டிருந்தது.

இன்ஸ்பெக்டர் தனராஜ் கவலைப்பட்டதற்குத் தகுந்தாற்போல் அன்று மாலை அவர் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து கிளப்புக்குச் சென்று வழக்கம்போல் இரவு எட்டு மணி வரையில் சீட்டாடி விட்டு வீடு சென்றபோது, அங்கே ஒரு விசேஷம் காத்திருந்தது. அதாவது வீட்டின் முன் ஹாலில் இருந்த மேஜையின் மீது ஒரு கடிதம் கிடந்தது. கடிதத்தை இன்ஸ்பெக்டர் அலட்சியமாக எடுத்துப் படித்தார். இரண்டு வரி படித்ததும் அலட்சியம் மாறி ஆவலும்



பரபரப்பும் ஏற்பட்டன. அந்தக் கடிதத்தில் எழுதி யிருந்தது பின்வருமாறு :—

"ஐயா, தங்களுடைய சிநேகிதரான தேசத் தொண்டர் சிவராஜ் ஒரு பெரிய இக்கட்டில் சிக்கிக் கொண்டிருக்கிறார். இன்று இரவு அவருக்கு ஒரு பெரிய ஆபத்து வரக் காத்திருக்கிறது. அவருடைய உயிரைக் காப்பாற்றுவதில் தங்களுக்குச் சிரத்தை இருக்கும் பட்சத்தில் இன்றிரவு அவர் தமது அறையை விட்டு வெளியேறாமல் பார்த்துக்கொள்ளவும்.

இப்படிக்கு,
ஒரு அபலை ஸ்திரீ.

குறிப்பு :—ஒருவேளை அவர் வெளியே செல்வதைத் தடுக்க முடியா விட்டால் இரவு பத்தரை மணி சுமாருக்கு மாசிக் கோனார் வீதியிலுள்ள இரட்டை மாடி வீட்டுக்குச் சென்று பார்க்கவும். அங்கே உயிருடன் அவரைக் கண்டு பிடித்தால் உங்களுடைய அதிர்ஷ்டந்தான்."

மேற்படி கடிதத்தை இரண்டு மூன்று தடவை இன்ஸ்பெக்டர் தனராஜ் கவனமாகப் படித்தார். ஒவ்வொரு தடவை படிக்கும்போதும் அவருடைய புருவங்கள் நெற்றியில் இன்னும் சிறிது மேலே ஏறின.

பின்னர் தம்முடைய உள் சட்டைப் பைக்குள் பத்திரப்படுத்தி வைத்திருந்த கடிதத்தை எடுத்துப் பார்த்தார். சிவராஜுக்குத் தன்னைக் காப்பாற்றும்படி அபயக் கடிதம் எழுதிய அபலை ஸ்திரீயும், இப்போது தமக்கு அபாய எச்சரிக்கை செய்து எழுதியுள்ள அபலை ஸ்திரீயும் ஒருத்தியேதான் என்று தெரிந்தது. இரண்டு கையெழுத்தும் ஒன்றாகவே இருந்தது!

எச்சரிக்கைக் கடிதம் கொண்டு வந்தது யார் என்று வீட்டில் விசாரித்துப் பார்த்தார். யாரோ ஒரு சிறு பெண், — சுமார் பத்து வயதுள்ள பெண், — சாயங்காலம் கொண்டு வந்து கொடுத்து விட்டுப் போனதாக வேலைக்காரன் சொன்னான். வேறு தகவல் ஒன்றும் தெரியவில்லை.

தனராஜ் அவசரமாகச் சாப்பிட்டு விட்டு மோட்டார் சைக்கிளை எடுத்துக்கொண்டு புறப்பட்டார். முதலில் சிவராஜின் அறைக்குச் சென்றார். அறை பூட்டிக் கிடந்தது. அதைப் பார்த்ததும் சட்டென்று ஒரு சந்தேகம் தனராஜின் மனதில் உதித்தது. தமக்கு வந்த கடிதம் ஒரு பெரிய சூழ்ச்சியில் சேர்ந்ததாகவே இருக்க வேண்டும். சிவராஜ் இத்தனை நேரம் பிடாரி கோவிலுக்குப் போயிருப்பான். தம்மை அங்கு போகாமல் தடுப்பதற்காகவே அந்தக் கடிதம் வந்திருக்கிறது. கடைசியில் ஏமாந்தது சிவராஜ் அல்ல; தாம்தான்!

இந்த எண்ணம் மனதில் உதித்ததும் தனராஜ் மோட்டார் சைக்கிளைத் தட் தட் என்று விட்டுக்கொண்டு அதி விரைவாகச் சென்றார். ஊர் எல்லைக்கு ஐந்து மைல் தூரத்திலிருந்த பிடாரி கோவிலுக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே மற்றவர்கள் எல்லாரும் தயாராய்க் காத்திருந்தார்கள். ஆனால் சிவராஜை மட்டும் காணவில்லை.

மறுபடியும் தனராஜின் மனதில் சந்தேகம் தோன்றித் தேளைப் போல் கொட்டியது. அந்த எச்சரிக்கைக் கடிதத்தில் எழுதி யிருந்தது ஒரு வேளை உண்மை தானோ என்று எண்ணினார்.

சிவராஜிடம் அவருக்கு ஏற்பட்டிருந்த அபிமானம் மோட்டார் சைக்கிளின் வேகத்தை ஒன்றுக்கு மூன்று மடங்கு ஆக்கியது. ஆனால் மாசிக்கோனார் வீதியை நெருங்கியதும் சைக்கிளின் வேகத்தையும் சத்தத்தையும் குறைத்துக் கொண்டார். குறிப்பிட்ட வீட்டை அடைந்து பார்த்த போது கீழ் வீடு பூட்டிக் கிடந்தது. மேல் மாடியில் மூணுக்கு மூணுக்கு என்று விளக்கு வெளிச்சம் தெரிந்தது. மச்சுப்படி வீட்டின் வெளித் தாழ்வாரத்திலேயே இருந்தபடியால் சத்தம் செய்யாமல் ஏறிச் சென்றார். மேல் மாடியின் தாழ்வாரத்தை அடைந்ததும் அங்கிருந்த ஜன்னல் வழியாக அவர் பார்த்தபோது ஒரு விந்தையான காட்சி காணப்பட்டது. எத்தனையோ அபாயகரமான நிலைமைகளைப் பார்த்துச் சமாளித்தவரான இன்ஸ்பெக்டர் தனராஜுக்கே அந்தக் காட்சி பீதியையும் குலை நடுக்கத்தையும் உண்டாக்கியது.

மேலே கட்டித் தொங்கிய ஹரிகேன் லாந்தருக்குப் பக்கத்தில் ஒரு பெஞ்சியில் சிவராஜ் உட்கார்ந்து அங்கே கிடந்த புத்தகங்களைப் புரட்டிக் கொண்டிருந்தான். காலடிச் சத்தம் கேட்டு நிமிர்ந்து எதிரே பார்த்தான். முதல் நாள் மாலை சந்தின் முடுக்கில் அவர் பார்த்த பெண் சிவராஜுக்கு எதிரில் நின்று கொண்டிருந்தாள். அவள் முகத்திலோ பீதி குடிகொண்டிருந்தது. சிவராஜ் நிமிர்ந்து அவளை நோக்கிய அதே கணத்தில் அவனுக்குப் பின்னால் ஒரு கதவு சத்தமில்லாமல் திறந்தது. திறந்த கதவின் வழியாக ஒரு பெரிய முரட்டு மனிதன் தோன்றினான். அவன் கையில் பிடித்திருந்த தடியை ஓங்கிச் சிவராஜைப் பிடரியில் அடித்தான்.

அதே சமயத்தில் 'வீல்' என்று பெண்ணின் அலறும் குரல் கேட்டது. ஹரிகேன் லாந்தர் கீழே விழுந்து சுக்கலாயிற்று. விளக்கும் அணைந்தது. வீட்டின் உட்புறமெல்லாம் இருள் சூழ்ந்தது.

தடதட வென்று மனிதர்கள் விரைந்து நடக்கும் சத்தமும் நாற்காலிகளும் மேஜைகளும் உருண்டு தரையில் விழும் சத்தமும் ஒரே குழப்பமாகக் கேட்டன. (தொடரும்)



## காந்தி மகன் தலைமை

சென்னையில் ஏப்ரல் மீ 18உ முதல் 20உ வரையில் நடந்த அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி ஆகாச விமானத்தில் வந்து இறங்கினர்.

★

விமான நிலயத்தில் சென்னைப் பத்திரிகாசிரியர்களால் வரவேற்கப்பட்டார்.

★

மகாநாட்டுக் காரியதரிசியும் டில்லி "நியூஸ் க்ரோனிகல்" ஆசிரியருமான ஸ்ரீ ஜே. என். ஸானி ஏதோ நாடக பாணியில் பேசி நடிப்பதைக் கீழே காணலாம்.





சென்னை அரசாங்க மாளிகையிலுள்ள பிரதான சபா மண்டபத்தில் மகாநாடு நடந்தது.

★

அழகாக அலங்கரித்திருந்த மேடையில் நின்று ஸ்ரீ தேவதாஸ் காந்தி தமது தலைமைப் பிரசங்கத்தை நிகழ்த்தினார்.









அகில இந்தியப் பத்திரிகாசிரியர்களுக்குச் சென்னை அரசாங்கத்தின் மந்திரிகள் சிறப்பாக விருந்தளித்தார்கள்.

★

விருந்தின் போது பிரதம மந்திரியின் ஒரு புறத்தில் ஸ்ரீ தேவதாஸ் காந்தியும் இன்னொரு புறத்தில் சென்றவருடத்து மகாநாட்டுத் தலைவர் ஸ்ரீ துஷார்காந்தி கோஷும் வீற்றிருந்தார்கள்.





சென்னைப் பத்திரிகாசிரியர்களான ஸ்ரீ கே. சீனிவாசன், ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் ஆகியவர்களுடன், மகா நாட்டின் காரியதரிசியும் பம்பாய்ப் பத்திரிகாசிரியருமான ஸ்ரீ 'ஸ்டாலின்' சீனிவாசன் அடிக்கடி கலந்தாலோசித்தார்.

* * *

"கல்கி" காரியாலயத்தில் ஸ்ரீ தேவதாஸ் காந்திக்கு அளிக்கப்பட்ட விருந்துக்கும் பிரதம மந்திரி ஸ்ரீ ஓமந்தூர் ரெட்டியாரும் மற்றும் பிரபல அகில இந்தியப் பத்திரிகாசிரியர்களும் விஜயம் செய்து சிறப்பித்தார்கள்.

# பேனா மன்னர்கள்

ரா.கி.

காந்தி மகன் ஸ்ரீ தேவதாஸ் காந்தியை முதன் முதலாக 1933-ம் வருஷ ஆரம்பத்தில் நான் சந்தித்தேன். முக்கியமாகத் தீண்டாமை விலக்குப் பிரசாரம் செய்யும் நோக்கத்துடன் ஸ்ரீ தேவதாஸ் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்திருந்தார். அச்சமயம் சிறையில் இருந்த மகாத்மா காந்தி, "தீண்டாமை ஒழிப்பு வேலை தீவிரமாக நடைபெறாவிட்டால் உண்ணாவிரதம் இருந்து உயிரை விடுவேன்!" என்று செய்தி அனுப்பியிருந்தார். இந்தச் செய்தி தேசத்தை யெல்லாம் கலக்கியிருந்தது. ஸ்ரீ தேவதாஸின் மனதை அந்தச் செய்தி என்ன பாடு படுத்தியிருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை. எனவே மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தம்மாலான திருப்பணியைச் செய்வதற்காக ஸ்ரீ தேவதாஸ் தமிழ்நாட்டுக்கு வந்தார். சமீபத்திலேதான் சிறையிலிருந்து விடுதலையாகியிருந்த ராஜாஜியும் ஸ்ரீ தேவதாஸின் சுற்றுப் பிரயாணத்தில் சேர்ந்து கொண்டார். காந்தி குமாரரின் பிரசங்கங்களைக் கூட்டங்களில் மொழி பெயர்ப்பதற்காக மேற்படி பிரயாணத்தில் சேர்ந்து கொள்ளும்படி எனக்குக் கட்டளை வந்தது.

காஞ்சிபுரத்தில் யாத்திரை ஆரம்பமாகித் திருவனந்தபுரத்தில் முடிவடைந்தது. தமிழ் நாட்டில் பல முக்கியமான பட்டணங்களில் தலைவர்களுக்கு வரவேற்புக்களும் பொதுக் கூட்டங்களும் நடந்தன.

தீண்டாமையை ஒழிக்க வேண்டும், ஆலயங்களை எல்லாருக்கும் திறந்துவிட வேண்டும் என்னும் விஷயத்தையே ராஜாஜியும் தேவதாஸூம் முக்கியமாகப் பேசினார்கள். பேசிய இடத்திலெல்லாம் தீண்டாமை ஒழிப்புக்குச் சாதகமாகப் பொது மக்கள் கைதூக்கி ஒப்புக் கொண்டார்கள்.

திருவனந்தபுரத்தில் பிரயாணம் முடிந்ததும், எனக்கு இதற்குள் ஏன் முடிந்தது என்று தோன்றியது. ராஜாஜியிடம் நான் "இதே மாதிரி மேலும் பிரயாணம் செய்து கொண்டு இலங்கைத் தீவுக்கும் அப்பால் அந்தமான்-நிக்கோபார் தீவுகளுக்கும் போகலாமே?" என்று சொன்னேன்.

"அங்கே யெல்லாம் ஆலயங்கள் இல்லை திறப்பதற்கு! தீண்டாமையும் கிடையாது. ஆகையால் பிரசாரத்துக்கும் அவசியம் இல்லை!" என்று ராஜாஜி சொல்லிவிட்டார்.

அப்படி நான் ராஜாஜியிடம் யோசனை கூறியதற்குக் காரணம் ஸ்ரீ தேவதாஸ் காந்தியைப் பிரியவேண்டியிருக்கிறதே என்ற காரணத்தினால்தான்.

காஞ்சிபுரத்தில் முதன் முதலாக நான் தேவதாஸ் அவர்களைச் சந்தித்தபோது, அவரை அணுகுவதற்கும் பேசுவதற்கும் கொஞ்சம் பயமாயிருந்தது. மன்னாதி மன்னர்களையெல்லாம் விட மகத்தான சாம்ராஜ்யத்துக்கு உரியவராய், முப்பத்தைந்து கோடி மக்களின் இதய சிம்மாசனத்தில் வீற்றிருப்பவராய், இமயமலையிலிருந்து குமரிமுனை வரையில் பரந்த இந்திய தேசத்தின் ஏக சக்ராதிபதிபோல் விளங்கிய மகாத்மா காந்தியின் செல்வப் புதல்வர் அல்லவா அவர்? அத்தகையவரிடம் அவ்வளவு இலகுவாக நெருங்க முடியுமா? பழக முடியுமா? பேசத்தான் முடியுமா? ஏதாவது நாம் கேட்டால் அவர் நம்மை மதித்துப் பதில் சொல்லுவாரா?

இந்தச் சந்தேகங்கள் எல்லாம் முதல் நாளே தீர்ந்து போய்விட்டன. பெரிய மகாத்மாவின் புதல்வர் தாம் என்கிற எண்ணம் ஸ்ரீ தேவதாஸின் மனதில் இருந்ததோ, என்னமோ தெரியாது. பேசுவதிலும் பழகுவதிலும் கொஞ்சம்கூட அதைக் காட்டிக்கொள்ளவில்லை. அவருடைய பேச்சின் இனிமை காலஞ் சென்ற புஷ்பவனம் ஐயரின் சங்கீதத்தின் இனிமையை ஒத்திருந்தது. அவருடைய இளம் முகத்தில் இயற்கையாகக் குடிகொண்டிருந்த சாந்தமும் புன்னகையும் கை தேர்ந்த தமிழ் நாட்டுச் சிற்பி அமைத்த நடராஜ விக்கிரகத்தின் திருமுகத்தில் பொலியும் சாந்தத்தையும் புன்னகையையும் ஒத்திருந்தன. சுமார் இரண்டு வார காலத்தில் அவருடைய முகத்தின் அமைதி ஒரு தடவையாவது

குலேந்து நான் பார்க்கவில்லை. கோபம் அல்லது வெறுப்பின் அறிகுறியையே அவருடைய முகத்தில் காணவில்லை.

இரண்டு மூன்று நாளைக்குள்ளே நாங்கள் ஆப்த நண்பர்களாகி விட்டோம்! அதாவது அத்தகைய பிரேக சமத்துவ உணர்ச்சி என் மனதில் உண்டாகி வளரும்படியாக ஸ்ரீ தேவதாஸ் காந்தி தமது இனிய சுபாவத்தினால் செய்து விட்டார்.

சுற்றுப் பிரயாணம் முடிந்து திரும்பியதும் "காந்தி மகன் காந்தி" என்று ஒரு கட்டுரை எழுதினேன். அவ்வளவு உள்ளம் நிறைந்த உணர்ச்சியோடும், உண்மையான ஆர்வத்தோடும் வேறு எந்தக் கட்டுரையும் நான் எழுதியதில்லை யென்று சொல்லலாம்.

* * *

சில மாத காலத்துக்குப் பிறகு, காந்தி மகன் காந்தி தமிழகத்துக்கு மருமகனுகப் போகிறார் என்ற செய்தி கிடைத்தபோது என் உள்ளம் பூரித்தது. மகாத்மா காந்தி உண்ணாவிரதம் இருந்து யமனுலகின் வாசற்படி வரையில் சென்று, திரும்பி வந்திருந்தார்! பூனாவில் லேடி தாக்கர்ஸி மோட்டியின் 'பர்ணகுடி'யில் தங்கியிருந்தார். வீட்டின் பெயர் 'பர்ணகுடி' — அதாவது இலைகளால் ஆன குடிசை. ஆனால் உண்மையில் ஒரு மூலைக்கு ஒரு மூலை கால் மைல் நீளம் கொண்ட அரண்மனையை யொத்த மாளிகை அது. அதிலேதான் ஸ்ரீ தேவதாஸின் கலியாணம் நடைபெற்றது. அவ்வளவு பெரிய அரண்மனையில் நடந்தாலும், மிக்க ஏழைக் குடும்பத்துக் கலியாணத்தைப்போல் எளிய முறையில் நடந்தது. கல்யாணத்துக்காக வென்று யாரையும் அழைக்கக் கூடாது என்று மகாத்மா திட்டம் செய்திருந்த போதிலும், ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜ், ஸ்ரீமதி சரோஜனி தேவி, ஸ்ரீ ஆனே, ஸ்ரீ கேல்கர், மகாகனம் சாஸ்திரியார் முதலியோர் தாங்களாகவே வந்து சேர்ந்தார்கள். அவர்களுடனே மேற்படி கலியாண வைபவத்தை உடனிருந்து காணும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது. தமிழ் நாட்டுப் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மிக்கு ஸ்ரீ தேவதாஸ் தகுந்த கணவர்தான் என்ற நம்பிக்கையுடன் திரும்பி வந்தேன். அது மட்டுமல்ல; இல்வாழ்க்கை நடத்தும் விஷயத்தில் ஸ்ரீ தேவதாஸ் காந்தி தமது தந்தையைக் காட்டிலும் சிறந்து விளங்குவார் என்றும் உறுதி கொண்டேன்.

காந்தி மகாத்மா காந்தி மகாத்மாதான்; என்றாலும், தம் வாழ்க்கைத் துணைவியை நடத்தும் விதத்தில் மகாத்மா அவ்வளவாகச் சிறந்து விளங்கினார் என்று சொல்ல முடியாது. அன்னை கஸ்தூரிபாய்த் தெய்வத்தை மகாத்மா சில சமயங்களில் படாத பாடெல்லாம் படுத்தி வைத்தார் என்பதை அவருடைய சுயசரிதத்தில் ("சத்திய சோதனை"யில்) படித்திருக்கிறோமல்லவா?

எனவே இந்த ஒரு துறையில் ஸ்ரீ தேவதாஸ் தமது மாபெருந் தந்தையைக் காட்டிலும் நிச்சயம் சிறந்து விளங்குவார் என்ற உறுதி எனக்கு ஏற்பட்டிருந்தது.

ஆனால் என்ன அதிசயத்தைச் சொல்ல? தமிழ் நாட்டின் புதல்வியை மணந்து கொண்ட சில வருஷங்களுக்கெல்லாம் ஸ்ரீ தேவதாஸ் மறு மணம் செய்துகொள்ளப் போகிறார் என்ற செய்தியைக் கேட்டுத் திகைத்துப் போனேன்! சீக்கிரத்திலேயே அது உண்மையாகவும் நடந்து விட்டது. ஸ்ரீ தேவதாஸ் புது டில்லி நகரில், "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" என்னும் தினப் பத்திரிகையை மணம் புரிந்து கொண்டார்! என்னே? என்னே? இந்த உலக இயல்புதான் என்னே?

எனினும், பிற்பாடு புது டில்லிக்கு நான் போக நேர்ந்த சமயங்களில் மேற்படி சம்பவத்தைப் பற்றி ஸ்ரீமதி லக்ஷ்மி தேவதாஸ் அதிகமாகக் கவலைப்படவில்லை யென்றும், குதூகலமே அடைந்திருக்கிறார் என்றும் தெரிந்து கொண்டேன். பின்னர், நமக்கென்ன வந்தது என்று கவலைப்படுவதை விட்டு விட்டேன். அதுமட்டுமல்லாமல் "நம்முடைய தொழிலுக்கு ஸ்ரீ தேவதாஸும் வந்து விட்டாரல்லவா?" என்று மகிழ்ச்சியும் அடைந்தேன். அந்தத் தொழிலில் அவர் மேலும் மேலும் அடைந்து வந்த வெற்றியைப் பற்றி அறிந்தபோது என்னுடைய மகிழ்ச்சியும் அதிகமாகி வந்தது.

பத்திரிகையைக் "கலியாணம் செய்து கொண்டார்" என்று மேலே குறிப்பிட்டேனல்லவா? அதில் என்ன பொருத்தம் இருக்கிறது என்று நேயர்கள் சிலர் கருதக் கூடும். பொருத்தம் நிரளவு இருக்கத்தான் இருக்கிறது. ஒரு குடும்பத்தை நடத்துவதற்கு வேண்டிய பொறுமையைப் போல் பத்து மடங்கு பொறுமை ஒரு பத்திரிகையை நடத்துவதற்கு வேண்டும். கோபம் வரும்போது சாந்தமா யிருப்பதாக நடிக்கவும், சாந்தமா யிருக்கும்போது கோபம் வந்தது போல் பாசாங்கு செய்யவும் தெரிய வேண்டும். கஷ்டம் வரும்

போது நண்பர்கள் எல்லாராலும் கைவிடப் படுவதற்குச் சித்தமாயிருக்க வேண்டும். குடும்பத்துக்குள்ளே எத்தனையோ சண்டை சச்சரவுகளைத் தீர்க்கத் தெரிய வேண்டும்; அவசியமான சமயங்களில் தனிக் குடித்தனம் அனுப்பவும் தெரிய வேண்டும்!

இந்தக் கலைகளில் எல்லாம் ஸ்ரீ தேவதாஸ் மிகத் தேர்ந்தவராகி, பத்திரிகை உலகத்தில் மேலும் மேலும் புகழும் முக்கியத்துவமும் அடைந்து வந்தது எனக்கு எவ்வளவோ ஆனந்தத்தை அளித்து வந்தது.

கடைசியாக, நானது வருஷத்தில் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டுக்கு ஸ்ரீ தேவதாஸ் காந்தி அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது என் ஆனந்தம் பரிபூரணம் ஆயிற்று.

* * *

அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் ஆறாவது வருஷக் கூட்டம் சென்ற வாரத்தில் சென்னையில் நடைபெற்றது. மூன்று தினங்கள் சிறப்பாக நடந்தது. இந்த மகாநாட்டுக்காக இந்தியா தேசத்தின் பல பகுதிகளிலிருந்தும் பேனா மன்னர்கள் பலர் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார்கள். சுமார் 80 பேர் வந்திருந்தார்கள். வந்திருந்த பேனா மன்னர்களுக்கெல்லாம் மன்னர் மன்னராக ஸ்ரீ தேவதாஸ் அக்கிராசன சிம்மாசனத்தில் வீற்றிருந்து மகாநாட்டைச் சிறப்பாகவும் சமூகமாகவும் நடத்தி வைத்தார்.

அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாடு முதன் முதலில் 1940-ல் பிறந்தது. சாதாரணமாக ஒற்றுமை ஏற்படக்கூடாத வர்க்கங்களைக் குறிப்பிடும்போது பத்திரிகாசிரியர்கள் தலைப்பிலேயே வரக்கூடியவர்கள். பத்திரிகைகளுக்குள் அபிப்பிராய பேதங்களும் கொள்கை வித்தியாசங்களும் இருப்பது இயற்கை. எல்லாப் பத்திரிகைகளும் ஒரே கொள்கை அல்லது அபிப்பிராயத்தையே எழுதுவதாயிருந்தால் பல பத்திரிகைகளுக்கு அவசியமே இல்லையல்லவா? அதோடு தொழில் முறையில் ஒவ்வொரு பத்திரிகையும் தன்னுடைய செல்வாக்கையும் விற்பனையையும் அதிகமாக்கிக் கொள்ள முயல்வதிலும் ஆச்சரியம் ஒன்றுமில்லை. இந்த முயற்சியில் போட்டி ஏற்படுவதும் இயற்கையே. அபிப்பிராய வேற்றுமைகளும் தொழில் போட்டிகளும் இருந்த போதிலும் சொந்த முறையில் சமூகமாகவும் சிநேக தர்மம் கெடாமலும் நடந்து கொள்வது எளிய காரியமல்ல. எனவே, பத்திரிகாசிரியர்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாகக் காரியங்களை நடத்துவது என்பதும் கஷ்டமான காரியந்தான்.

ஆனால் மேற்படி கஷ்டமான காரியத்தைச் சாதிப்பதற்கு ஒரு பெரிய அவசியம் 1940-ல் ஏற்பட்டது. யுத்தம் காரணமாக இந்தியப் பத்திரிகைகள் எல்லாம் "இருப்பதா? இறப்பதா?" என்ற நெருக்கடியான நிலைமைக்கு வந்திருந்தன. இருப்பது என்றால், பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்கு எல்லா உரிமைகளையும் பறிகொடுத்து விட்டுச் சுதந்திரத்தையும் கௌரவத்தையும் இழந்து வாழ வேண்டியதாயிற்று. எனவே, பத்திரிகைக்காரர்கள் தங்களுடைய உரிமைகளையும் உண்மையைச் சொல்லும் சுதந்திரத்தையும் பாதுகாத்துக் கொள்வதற்காக ஒன்று சேர்ந்து போராட வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

ஆகவே, 1940-ம் வருஷக் கடைசியில் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாடு முதன் முதலாகக் கூடியது. பின்னர், ஆறு வருஷம் பிழைத்திருந்து வளர்ச்சியடைந்து நானது 1947-ம் ஆண்டு ஏப்ரலில் ஆறாவது கூட்டம் நடைபெற்றது.

இந்த மகாநாட்டைக் குறித்துத் தமிழ்நாட்டிலுள்ள நாம் பலவிதத்திலும் பெருமை கொள்ள இடம் உண்டு. அ. இ. ப. மகாநாட்டின் முதல் அக்கிராசனர் நமது "ஹிந்து" பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ கே. ஸ்ரீனிவாசன் அவர்கள். மூன்று வருஷம் அவரே தொடர்ந்து அக்கிராசனராக இருந்து வந்தார். யுத்த ஆரம்ப நாட்களில், இந்தியப் பத்திரிகைகளை எத்தனையோ ஆபத்துகள் சூழ்ந்திருந்த காலத்தில், பத்திரிகாசிரியர் மகாநாட்டைத் தோற்றுவித்ததிலும் வளர்த்ததிலும் பெரும் பங்குக்கு உரியவர் ஸ்ரீ கே. ஸ்ரீனிவாசன் அவர்கள். அதிகார வர்க்கத்தோடு போராட வேண்டிய சமயத்தில் போராடி, சமரசம் பேசவேண்டிய சமயத்தில் சமரசம் பேசி, கண்டிப்பாக இருக்கவேண்டிய சமயத்தில் கண்டிப்பாக இருந்து, விட்டுக் கொடுக்கவேண்டிய நிலைமையில் விட்டுக் கொடுத்து, யுத்தகால நெருக்கடியில் இந்தியப் பத்திரிகைகளையும் இந்தியப் பத்திரிகைகளின் உரிமையையும் காப்பாற்றிக் கொடுத்தவர் ஸ்ரீ கே. ஸ்ரீனிவாசன் அவர்கள்தான். வட நாட்டிலிருந்து இந்த வருஷத்து மகாநாட்டுக்கு வந்திருந்த

பத்திரிகாசிரியர்கள் பலரிடம் நான் பேசினேன். அவர்கள் எல்லாரும் ஒருமுகமாகவும் உற்சாகமாகவும் மேற் கூறிய விஷயத்தை ஆமோதித்தார்கள். அதுமட்டுமல்ல ; இந்திய தேசத்திலேயே தரத்தில் உயர்ந்த சிறந்த பத்திரிகை "ஹிந்து" பத்திரிகைதான் என்பதையும் தயக்கமின்றி ஒப்புக் கொண்டார்கள்.

"ஹிந்து" ஆசிரியரின் தொண்டு ஒரு புறம் இருக்க, பொதுவாகப் பத்திரிகைத் தொழிலில் தென்னிந்தியர்களின் திறமை பகிரங்க இரகசியமாகும். சென்னையிலிருந்து லாகூர் வரையில் எந்த முக்கியமான ஆங்கிலப் பத்திரிகைக் காரியாலயத்துக்குப் போனாலும் மதராஸி உதவி ஆசிரியர்களைப் பார்க்கலாம். அந்தந்தப் பத்திரிகைகளின் ஆசிரியர்களும் சொந்தக்காரர்களும் வடநாட்டாரா யிருந்தாலும் சரி, ஐரோப்பியரா யிருந்தாலும் சரி, தென்னிந்திய உதவி ஆசிரியர்களைப் பற்றி நல்ல வார்த்தை சொல்லிப் பாராட்டாதவர்கள் இல்லை. மேலும் வடநாட்டில் நடக்கும் பல பத்திரிகைகளுக்குத் தென்னிந்தியர்கள் தலைமை ஆசிரியர்களாகவும் நிர்வாக ஆசிரியர்களாகவும் பொறுப்பு வகித்து நடத்தி வருகிறார்கள்.

இந்தியப் பத்திரிகைத் தொழிலில் இவ்விதம் தென்னிந்தியா வகிக்கும் முதன்மை ஸ்தானத்தை எண்ணிப் பார்க்கும்போது, ஆறு வருஷத்திற்குள் இரண்டாவது தடவையாகச் சென்னையில் அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாடு கூடியது மிகப் பொருத்தமான காரியமே யல்லவா?

என்னைப் பொறுத்த வரையில், ஸ்ரீ தேவதாஸ் காந்தி ஈனது வருஷத்து மகாநாட்டுக்குத் தலைமை வகித்த படியால், அது மிகவும் முக்கியம் பொருந்தியதாயிற்று. எனவே, அக்கிராசனரை வரவேற்பதற்காக ஆகாச விமான நிலையத்துக்கே போய்ச் சேர்ந்து விட்டேன். இன்னும், 'ஹிந்து' ஆசிரியர் ஸ்ரீ கே. சீனிவாசன், பம்பாயிலிருந்து முன்னதாகவே மகாநாட்டுக் காரியங்களைக் கவனிப்பதற்காக வந்திருந்த 'ஸ்டாலின்' சீனிவாசன், ஸ்ரீ ராமநாத் கோயங்காவின் புதல்வர் ஸ்ரீ பகவான் தாஸ், 'ப்ரீபிரஸ்' ஆசிரியர் ஸ்ரீ எஸ். வி. ஸ்வாமி ஆகியவர்களும் வந்திருந்தார்கள்.

(தொடரும்)

DJK 20.

# பிச்சைக்காரன்

சரோஜா ராமமூர்த்தி

குளுகுளுவென்று மாசி நிலவு ஊர் முழுதும் படர்ந்து வீசிக்கொண்டிருந்தது. எங்கள் வீட்டுக்கு எதிரில் இருந்த பூட்டப்பட்ட பங்களாவின் தென்னை மரங்கள் காற்றில் 'உய்ய்' என்று ஆடி அசைந்தன. தெருவில் போவோர் வருவோருடைய இரண்டொரு வார்த்தைகளின் சத்தம் இடையிடையே கேட்டது. அத்துடன் இராப் பிச்சைக்காரன் ஒருவன், "தாயே! ஒரு பிடி அன்னம் போடு, அம்மா!" என்று தெருக்கோடியில் கத்திக் கொண்டு நின்றான்.

ஈஸிசேரில் சாய்ந்திருந்த என் கணவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அவருடைய சிந்தனையைப் பிச்சைக்காரனின் தீனக் குரல் கலைக்கவில்லை. நானும் அதை ஒரு வினாடிதான் கேட்டேன். மேற்கொண்டு அர்த்தமற்ற சிந்தனையில் — எண்ணச் சுழலில் என் மனமும் அகப்பட்டுத் திண்டாடிக் கொண்டிருந்தது.

மணி ஏழுக்கு மேல் இருக்கலாம். நிலவில் விளையாடிக் கொண்டிருந்த எங்கள் பெண் கிரிஜா, பாதி விளையாட்டில் திடுக்கிட்டு நின்றாள். வெளி'கேட்'டின் அருகில் போய் நின்று பயம் நிறைந்த கண்களால் தெருக் கோடியை இரண்டு தரம் உற்றுக் கவனித்தாள். பிறகு, பயம் கலந்த மிரண்ட பார்வையுடன் என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டாள்.

"என் வந்துட்டே, அம்மா? விளையாடினது போதுமா?" என்று கேட்டேன்.

"பூச்சாண்டி, அம்மா! கோடியிலே கத்தறான்!" என்று நாக் குழறப் பதிலளித்தாள் அவள்.

"வெறுமனே பிச்சைக்காரனுக்குப் பயப்பட்டாயானால் அவனிடம் உன்னைப் பிடித்துக் கொடுத்து விடுவேன்!" என்று சொல்லிக் கொண்டே, இதுவரையில் சிந்தனையில் ஆழ்ந்திருந்த என் கணவர் கிரிஜாவைத் திரும்பிப் பார்த்தார்.

அவருடைய மிரட்டல் அவ்வளவாக எனக்குப் பிடிக்கவில்லை. காரணம் அவரே அடிக்கடி என்னிடம் குழந்தைகளை 'பூச்சாண்டி' மிரட்டல் ஒன்றும் மிரட்டக் கூடாது என்று சொல்லியிருந்ததுதான்.

"பிச்சைக்காரன்னா பூச்சாண்டியா, அம்மா?" என்று தொடர்ந்து கேட்டாள் குழந்தை.

"பிச்சைக்காரன்னா பூச்சாண்டி இல்லே. பிச்சைக்காரன்னா......" என்று மேலே சொல்வதற்கு நான் தயங்கினேன்.

பிச்சைக்காரன் என்றால் என்ன என்று ஐந்து வயதுக் குழந்தைக்கு எப்படி வியாக்கியானம் செய்ய முடியும்? ஒரு நிமிஷம் எழுந்து நின்று பிச்சைக்காரன் எவ்விடத்தில் இருக்கிறான் என்று அறிந்து கொள்வதற்காகத் தெருக் கோடியைப் பார்த்தேன். பரட்டைத் தலையும், அழுக்கேறிய துணியும், கையில் தடியும் ஏந்தி அந்த மெலிந்த உருவம் ஒவ்வொரு வீட்டு வாசலிலும் மணிக் கணக்கில் நின்று ஏமார்ந்து நகர்ந்து வந்துகொண்டிருந்தது. ஏழு மணிக்கு முதலில் கேட்ட குரல் எங்கள் வீட்டருகில் வரும்போது மணி எட்டு ஆகிவிட்டது.

"தாயே! அம்மணி! ஒரு கவளம் அன்னம் அம்மா!" என்று கத்திக் கொண்டே அவன் எங்கள் வீட்டருகில் வந்து விட்டான்.

கிரிஜாவின் உடம்பு ஒரு நிமிஷம் நடுங்கி ஓய்ந்தது. குழந்தையை அணைத்துப் பிடித்துக் கொண்டேன்.

"இதென்ன, இப்படிப் பயப்படுகிறாளே?" என்றேன், என் கணவரைப் பார்த்து.

"அது நீ குழந்தை வளர்த்த லக்ஷணம்! 'பூச்சாண்டி' கதை சொல்லிப் பயமுறுத்தியிருப்பாய்!" என்றார் அவர்.

எனக்குக் கோபம் வந்தது. "சரி, நான்தான் குழந்தையைப் பயந்தாங்கொள்ளியாக்கி விட்டேன். அப்படியே இருக்கட்டும்! இப்போது 'பிச்சைக்காரன் என்றால் பூச்சாண்டியா?' என்று கேட்

கிறான். அதற்குப் பதில் சொல்லுங்கள்" என்றேன்.

"பிச்சைக்காரன்னு பூச்சாண்டி இல்லே, அம்மா! மனுஷன்தான்!" என்று அவன் அப்பா வியாக்கியானம் செய்தார்.




"பின்னே, அவன் என் அப்பா நம்மைப் போல் இல்லே?" என்றான் குழந்தை.

"இந்தக் கேள்விக்கு என்ன பதில் சொல்வது?" என்று நாங்கள் விழித்துக் கொண்டிருந்த போது, "அம்மா! தர்மலக்ஷ்மி, கொஞ்சம் ஏதாவது போடுங்க!" என்றான் அந்தப் பிச்சைக்காரன் மீண்டும்.

"அவன் என்ன கேட்கிறான், அம்மா?" என்றாள் கிரிஜா என்னைப் பார்த்து.

"சாதம் கேட்கிறான், போடலாமா?" என்று கேட்டுக்கொண்டே எழுந்தேன் உள்ளே போவதற்கு. 'கேட்'டருகில் நின்றிருந்த அந்தப் பரட்டைத் தலை உருவத்தினிடம் போவதற்கு எனக்கும் சிறிது பயமாகத்தான் இருந்தது. சிறு வயதில் நான் கேட்ட பேய் பிசாசுகளின் கதைகள்கூட நினைவுக்கு வந்தன. ஒரு கையில் விளக்கையும் எடுத்துக் கொண்டு போய்ச் சாதத்தை அவன் கலயத்தில் கொட்டினேன்.

"மகராஜி! நல்லா இருப்பீங்க!" என்று வாழ்த்திக் கொண்டே, "இந்தக் குழந்தை என்னு பேச்சு பேசுதம்மா!" என்று சொல்லி விட்டுக் கிரிஜாவைப் பார்த்தான் அவன்.

குழந்தையின் பயம் நன்றாகத் தெளிந்து விட்டது.

"ஏன் நீ சொக்காய் போட்டுக்கலே?" என்று கேட்டாள் அவனைப் பார்த்து.

"எனக்குச் சொக்கா யார் கொடுப்பாங்க?" என்றான் பிச்சைக்காரன்.

அவன் முகத்தையும் என் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள் கிரிஜா. அவள் பார்வையில், "அவனுக்குச் சொக்காய் கொடுக்கலாமா?" என்கிற கேள்வி தென்பட்டது.

"வா, போகலாம்" என்று குழந்தையின் கையைப் பற்றி அழைத்தேன்.

"போகலாம் இரு, அம்மா! அப்பாகிட்டே சொல்லி அவனுக்கு ஒரு சொக்காய் வாங்கிண்டு வரேன்!" என்று கூறி உள்ளே ஓடினாள். அவள் எண்ணம் பலிக்கவில்லை. சொக்காய் கேட்டால் கிடைத்து விடுமா? அதுவும் இந்தக் காலத்தில்? பிச்சைக்காரன் ஆவல் நிறைந்த கண்களுடன் உள்ளே பார்த்துக் கொண்டு நின்றான்.

"போ, அப்பா! குழந்தை ஏதோ வெறுமனே சொல்கிறது. இராக்காலத்தில் சொக்

காய் யார் தரப் போகிருர்கள், உனக்கு?'' என்றேன் நான்.

பிச்சைக்காரன் நகரவில்லை. குழந்தையின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு நின்ருன்.

குழந்தை வெறுங் கையுடன் திரும்பி வந்தாள். அவள் முகத்தில் தோல்வியின் சின்னம் காணப்பட்டது.

''போ, அப்பா! குழந்தை பேச்சைக் கேட்டுக்கொண்டு வீணுய்க் காத்திருக்காதே!'' என்று நான் பிச்சைக்காரனை அனுப்பப் பார்த்தேன.

''எதாச்சியும் பழசு பார்த்துக் குடுங்க, அம்மா!'' என்ருன்.

எனக்கு, கிரிஜாவின் மேல் கோபம் வந்தது. ''போடி கழுதை! இல்லாததையெல்லாம் கிளப்பி விட்டு விட்டு, என்ன பாடு படுத்தறே, நீ?'' என்றேன்.

பிச்சைக்காரன் முணுமுணுத்துக் கொண்டே 'கேட்' அருகிலிருந்த புல் தரையில் உட்கார்ந்து, கலயத்திலிருந்த சோற்றைப் பிசைந்து சாப்பிட ஆரம்பித்தான். அவன் மனதிலிருந்த சொக்காய் கிடைக்கும் என்கிற நம்பிக்கை போகவில்லை. சாப்பாடு முடிந்ததும் கலயத்தைக் கந்தையில் சுற்றித் தலைக்கடியில் வைத்துக் கொண்டு தரையில் படுத்து விட்டான். நிச்சிந்தையான அவன் உள்ளத்தைக் கண்டு எனக்கும் சிறிது பொறுமை ஏற்பட்டது.

''இன்னும் உள்ளே வர மனசில்லையா, உனக்கு?'' என்று என் கணவர் கூப்பிட்டு என் சிந்தனையைக் கலைத்தார்.

''சொக்காய் குடப்பா, அவனுக்கு! குளிரப் போறது!'' என்ருள் கிரிஜா.

''ஆமாம், ஆமாம், நீ உள்ளே வா!'' என்று அவளைக் கூப்பிட்டார் அவர். 'கேட்'டைச் சாத்திக் கொண்டு உள்ளே வரும் போது பிச்சைக்காரன் கண்கள் பரிதாபமாக எங்களைப் பார்த்தன.

உள்ளே நுழைந்தபோது, நான் பாத்திரக்காரனுக்குப் போட்டு வாங்குவதற்காக வைத்திருந்த பழைய துணி மூட்டை பீரோவின் மேலிருந்து பளிச்சென்று என் கண்ணில் பட்டது. ஒரு கிஷணம் தயங்கினேன். மறு விநாடி விறுவிறுவென்று மூட்டையைப் பிரித்தேன். இரண்டு மூன்று 'ஷர்ட்டு'கள் இருந்தன. அரைப் பழசு அவை. இரண்டு வேஷ்டிகள் வேறு. ''அந்தச் சொக்காயை வேண்டுமானுல் அவனுக்குக் கொடேன்!'' என்ருர் என் கணவர்.

''குடும்மா!'' என்ருள் குழந்தையும்.

''ஆமாம், நல்லாட்டமா இருக்கிற சொக்காயை இவனுக்குக் கொடுக்கிரு! பாத்திரக்காரனுக்குப் போட்டாலும் நல்ல பாத்திரமாகக் கிடைக்கும்'' என்று சொல்லிக் கொண்டே மூட்டைக்குள் மறுபடி அந்தச் சொக்காயைத் திணித்துவிட்டேன் நான்.

எல்லாத் துணிகளையும் போட்டு ஒரு 'டிபன் செட்' வாங்க வேண்டுமென்பது



என் விருப்பம். இது நெடுநாளைய ஆசை. இந்த ஆசையை இப்போது அடக்க முடியுமா?

* * *

விடியற்காலம். தெருவில் சாணம் தெளிக்க வந்த வேலைக்காரி, உரத்த குரலில் யாரையோ அதட்டுவது கேட்டு விழித்துக் கொண்டேன்.

“எழுந்திருய்யா! நல்லா தூங்கறே நீ!” என்று சொல்லிக் கொண்டே, சாண நீர் நிறைந்த ‘பக்’கெட்டை ‘நக்’கென்று ‘கேட்’டருகில் வைத்தாள் அவள்.

“பாவம்! அவனை எழுப்பாதே!” என்றேன் நான் வெளியே வந்து.

“நல்லா இருக்குது, அம்மா! எழுந்திருச்சி எங்காவது போகட்டுமே. விடிஞ்சி எழுந்திருக்கச்சே, வாசல்லே நல்லா இருக்குது இது!” என்றாள் அவள். என்ன கத்தியும் அவன் எழுந்திருக்காமற் போகவே, முகத்தருகில் குனிந்து, “ஐயா, ஐயா!” என்று கூப்பிட்டாள். பிறகு, நிமிர்ந்து ஒரு கணம் யோசித்தாள்; திரும்பவும் குனிந்து பார்த்தாள்.

அடுத்த கணம், “நல்லா இருக்குது இது! ஐடாவை எழுப்பி மொதல்லே இந்தப் பொணத்தைக் கிளப்ப வழி பண்ணுங்கோ! கண்டவன்களுக்கெல்லாம் இடம் விட்டா இப்படித்தான் நடக்கும்!” என்றாள் என்னைப் பார்த்து.

என் வாயடைத்துப் போய்விட்டது.

குழந்தை சொன்ன மாதிரி அவன் குளிரில் தான் விறைத்து இறந்து விட்டானோ? ஆம், அதில் என்ன சந்தேகம்?

அதற்குள் தூக்கம் கலைந்து அங்கே வந்த குழந்தை, அந்தப் பிச்சைக்காரனின் உடலை முனிசிபாலிடியார் அப்புறப்படுத்துவதைப் பார்த்துவிட்டு, “அவனை ஏன் அப்படித் தூக்கிண்டு போறா, அம்மா?” என்று என்னைக் கேட்டாள்.

“அவன் செத்துப் போய் விட்டான்! அதனால்தான் அப்படித் தூக்கிண்டு போறா!” என்றேன் நான்.

“ஏன் செத்துப் போனான்?” என்று கேட்டாள் குழந்தை.

அவளுக்கு என்ன பதில் சொல்வது?

# புத்திசாலிகள், ஜாக்கிரதை!

எஸ்.வி.எஸ்.

ஒரு நாள் ஒரு கதை படித்துக் கொண்டிருந்தேன். அது பின்வருமாறு :—

"அப்பா! எனக்கு நிரம்பவும் பணம் சம்பாதிக்க வேண்டுமென்றிருக்கிறது. அதற்கு என்ன செய்யலாம், அப்பா!" என்று வயது வந்த பையன் தன் தந்தையைக் கேட்டான்.

தந்தை, "ஏதாகிலும் ஒரு தொழிலிலோ வியாபாரத்திலோ ஈடுபட்டு யோக்கியமாக நடந்து வந்தாயானால், பணம் உன்னைத் தானே நாடி வரும்" என்றார்.

"அதற்கு ரொம்ப நாள் பிடிக்குமே அப்பா! உடனே பணம் நம் கைக்கு வரும்படி ஏதாவது உபாயம் சொல், அப்பா!" என்றான் தனயன்.

அதற்குத் தகப்பனார், "அப்படியானால் அயோக்கியனாகவும் கள்ளனாகவும் கபடனாகவுமிருந்தாயானால் பணம் பரபரவென்று வந்துவிடும்!" என்றார்.

புத்திரனுக்கு இந்த உபாயமும் இடைஞ்சலாகப் பட்டது. "அவ்வளவுக்கு நமக்குத் துணிச்சலும் தைரியமும் போதாது, அப்பா! வேறு ஏதாகிலும் வழி சொல், அப்பா!" என்றான்.

அப்பா ஒரு கணம் யோசித்து விட்டு, "முட்டாளாக இருக்க முயற்சி செய்!" என்றார்.

இந்தக் கதையைப் படித்ததும் என்னைத் தூக்கிவாரிப் போட்டது. கதை பிரமாதமாக இருக்கிறதே என்று எண்ணினேன்.

எத்தனையோ தனவந்தர்கள் தங்களுக்கு உள்ள செல்வத்தைத் தாங்கள் அனுபவிப்பதில்லை. பிறருக்கும் கொடுக்காமல் பணம் காக்கும் புத்திசாலிகளாக இருந்து காலத்தைக் கடத்திவிடுகிறார்கள். இதைப் பார்த்துத்தான், அந்தக் கதாசிரியர் அப்படிச் சொல்லியிருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன்.

பண விஷயம் வரும்போது என் படிப்பு விஷயமும் ஞாபகம் வருகிறது.

நான் பள்ளிக்கூடத்தில் படித்த போது என் கணக்கு வாத்தியார் எங்களையெல்லாம், "டேய், முட்டாள்!" என்று கூப்பிடுவார். நாளடைவில் நாங்களும் எங்கள் இயற்கைப் பெயரை மறந்து, "சர்வ முட்டாள், முழு முட்டாள்!" என்று எங்களுக்குள்ளேயே ஒருவரையொருவர் கூப்பிட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டோம்.

அந்த வருஷக் கடைசியில், பள்ளி ஆண்டு விழா வந்தபோது, ஒரு கனவான் பரிசளிப்பு வைபவத்துக்கு வந்திருந்தார். அவர் முதலில் தேறிய மாணவர்களுக்கும் ஆட்டம் பந்தயங்களில் முதற் பரிசு பெற்ற மாணவர்களுக்கும் பரிசுகளை அளித்து விட்டு, அரிய சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினார்.

"என் அன்பார்ந்த மாணவர்களே! இன்று உங்களில் ஒரு சிலரே பரிசு வாங்கியிருக்கிறார்கள். மற்றவர்களாகிய நீங்கள் எல்லாம் அவர்களைப் பார்த்து வெட்கமோ சந்தோசமோ மனசுக்குள் பட்டுக் கொண்டிருப்பீர்கள் என்பது எனக்குத் தெரியும். இது போன்ற அர்த்த மற்ற காரியம் கிடையாது.

"உங்களுக்காக ஒரு ரகசியத்தைச் சொல்லி வைக்கிறேன்.

"நானும் உங்களைப் போல் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்த போது, வகுப்பில் கடைசி மாணவனாகத்தான் இருந்தேன். ஆனால் அன்று முதல் மாணவனாக விளங்கியவரை அதோ பாருங்கள்!" என்று ஒரு மூலையைச் சுட்டிக் காட்டினார். அங்கு தாலுகா ஆபீஸ் தர்மபுத்திரய்யர் இருந்தார், உடல் ஒட்டி! "ஆனால் நான் இன்று எந்தப் பதவியிலிருக்கிறேன் பார்த்தீர்களா? ஆகவே நீங்கள் எல்லாரும் பரிசு வாங்காததே நல்லதாகப் போச்சு அல்லவா? உங்களில் யாராவது என்னைப் போல் வருங்காலத்தில் கனவானாக வரலாம் அல்லவா?" என்று எங்களை உற்சாகப்படுத்தினார். அப்போது நான் என்னை 'முட்டாள்' என்று எல்லாரும் அழைத்ததில் சந்தோஷப் பட்டேன். 'அந்த அரிய பதவிக்கு என்னைவிட நெருங்கியவர்கள் யார் உண்டு!" என்று சந்தோஷப் பட்டேன். அத்துடன் "புத்திசாலிகளே, ஜாக்கிரதை!' என்றும் என் சகாக்களுக்கு எச்சரிக்கை செய்தேன்.

இலக்கிய உலகிலும் இந்தப் புத்திசாலி விஷயம் வருகிறது. இலக்கியத்தில் அறி



"என்னடா இது? நீயும் நாவல் கிவல் எழுத ஆரம்பிச்சுட்டயா, என்ன?"

"இல்லேடா, இல்லே! என்னுடைய கதை களைப் போடாத பத்திரிகாசிரியர்களுக்குக் கார சாரமாய்க் கடிதம் எழுதிக் கொண் டிருக்கிறேன்!"

---

வாளி என்று கருதப்பட்ட பாத்திரத்தை முட்டாளாக்க முடியவில்லை. முட்டாளை அறிவாளியாக்க முடியவில்லை. ராமனை ராவணனாகவும், ராவணனை ராமனாகவும் செய்ய முடியவில்லை.

இந்த உண்மையை எடுத்துச் சொல்லும் ஒரு ரஸமான கதை யொன்று இருக்கிறது.

குரங்கையும் கோழியையும், மாட்டையும் ஆட்டையும், நரியையும் பரியையும் பாத்திரங்களாக வைத்துக் கொண்டு, மனித இயல்புகளை ஏற்றி, எத்தனையோ ரஸமான கதைகள் புனைந்தார் கிரேக்க அறிஞர் ஈஸாப். அவரைப் பற்றிய கதை ஒன்று.

ஈஸாப்பிடம் ஒரு நாள் கழுதை யொன்று சென்று, "ஐயா! நீங்கள் உங்களுடைய கதைகளில் என்னைப் பற்றிச் சொல்லும் போதெல்லாம்,என்னை ஒரு முட்டாளாகவே சித்திரித்திருக்கிறீர்கள். பைத்தியக்காரத் தனமாக நான் பேசியதாகவே எழுதி யிருக்கிறீர்கள். ஏதாகிலும் ஒரு கதையி லாவது, நான் ஒரு தடவையாவது புத்தி சாலித்தனமாகப் பேசியதாக எழுதுங்கள்" என்று கேட்டுக் கொண்டதாம்.

அதற்கு ஈஸாப், "கர்த்தபமே, கர்த்தபமே! என்ன காரியம் செய்யச் சொன்னாய்? நீ புத்திசாலியாகப் பேசினாய் என்று நான் ஒரு கதை எழுதிவிட்டால் உடனே உலகத் தார் எல்லாரும் ஈஸாப்புக்குப் புத்திக் கோளாறு ஏற்பட்டுவிட்டது என்று முடிவு கட்டி விடுவார்கள்" என்று சொன்னாராம்.

ஆனால், நம் நாட்டில் பைத்தியக் காரர்களே கிடையாதோ என்று எண்ணி விட வேண்டாம்.

இதோ பாருங்கள், சிவபெருமானைப் பார்த்து பரஞ்சோதி முனிவர் சொல்வதை!

"அப்பனே! நானோ கல்வி கேள்வி யில்லாத ஒரு கடையன். என்னையும் நீ ஆட்கொண்டாயே! உன்னைப்பற்றி நான் என்னவென்று சொல்ல!"

"அந்நாவோ! கல்லாக்
கடையேனை ஆட்கொண்ட
பித்தாவோ!"

என்கிறார்.

மதுரை சுந்தரேசுவரரைப் பார்த்து "பித்தாவோ!" (பைத்தியமே) என்கிறார்.

கல்லாக் கடையர்களை ஆட்கொள்ளும் தெய்வம்—இல்லை, இல்லை—பைத்தியம் நம்மை ஆட்கொள்ளவில்லை. இது ஒன்றே போதாதா நாம் எவ்வளவு கல்வி கற்ற வர்கள், எவ்வளவு புத்திசாலிகள் என்ப தற்கு அத்தாட்சி!

உண்மையிலேயே என் நண்பர் ஒருவர் ரொம்ப புத்திசாலி, கெட்டிக்காரர் என் றெல்லாம் பெயர் வாங்கினார். அவர் ஒரு நாள் இரண்டு தங்க வளையல்கள் வாங்கிக் கொண்டு போய்த் தம் மனைவி யிடம் கொடுத்து, "நீ என்னைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட போது நான் ஏழை யாக இருந்தேன். என்னிடம் பணமே கிடையாது. பணமிருந்தால் ஏதாவது அப் போது வாங்கித் தந்திருப்பேன்" என்றார்.

அதற்கு மனைவி, "அதனால் என்ன! நீங்கள் தான் அப்போதே புத்திசாலியாகவும் கெட்டிக்காரராகவு மிருந்தீர்களே!......" என்றாள்.

"நான் புத்திசாலியாக இருந்து என்ன பயன்! அதைத்தான் என்னால் உனக்குக் கொடுக்க முடியவில்லையே!" என்று விளை யாட்டுப் போக்கில் சொல்லி விட்டார். உடனே அந்த அம்மாள் காப்பி, டிபன் எல்லாவற்றிற்கும் தடை யுத்தரவு போட்டு விட்டாள். வெறும் கீரை ரசமும் சுட்ட அப்பளமுந்தான் அந்த இரண்டு நாட் களும் அவருக்குக் கிடைத்ததாம்.

புத்திசாலித்தனத்தின் விபரீத பலனைப் பார்த்தீர்கள் அல்லவா? ஆகவே, புத்தி சாலிகள் ஜாக்கிரதை!



ரம்மியமான
நறுமணங்கமழும்
கூந்தலுக்கும்,

மிருதுவான
குளுமைவாய்ந்த
மேனிக்கும்

அட்கின்ஸன்ஸ்
ஹேர் ஆயில்

நீங்கள் பிரியப்படும்
வாசனையுடன் கிடைக்கும்




# ATKINSONS HAIR OIL

AP.HO. 9-23 TM.

J. & E. ATKINSONS LIMITED, LONDON, ENGLAND



# நீடித்த இருமல்

## மிகவும் அபாயகரமானது

இருமலினால் உங்கள் ஸ்வாசாசயம் பலவீனமடையும். கிருமி நாசன, ஸ்வாச மாத்திரையான பெப்ஸ் சாப்பிடுவதால், அபாயம் தவிர்க்கப்படும். பெப்ஸ் வாயினுள் கரையும்போது, வெளியாகும் உன்னத மருந்து சத்துக்கள் ஸ்வாசத்தினால் ஸ்வாசாசயத்திற்குக் கொண்டு போகப்படுவதால், இருமலை நிறுத்தி, வெந்து வாடி வீங்கிய மெல்லிய தோல்களுக்கு இதமளித்து, மார்ச்சளியை அகற்றி, மற்ற தொத்து நோய்களின் வியாபகத்தையும் தடுக்கிறது. குளிர் ஜுரம், மூளை ஜுரம், தொண்டைப் புண், இருமல், ஜலதோஷம், மார்ச்சளி முதலிய மார்பு-சுவாசய சம்பந்தப்பட்ட வியாதிகள் 'பெப்ஸி'னால் அறவே அகற்றப்படுகின்றன.




# PEPS

## பெப்ஸ்

கிருமி நாசன ஸ்வாச மாத்திரைகள் சாப்பிடுங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்

எப்பொழுதும் கைவசம் வைத்திருங்கள்

No. 1

---

## எல்லா தேசத்தினரும் ப்ளாடினம் பேனாவினால் எழுதுகிறார்கள்

# Platignum

இங்கிலாந்து தயாரிப்பு



உண்மைதான்! கான்பரா, கெய்ரோவிலும் சரி—டென்னெண்ட் க்ரீக்கிலானாலும் சரியே—எத்தகைய சீதோஷ்ண நிலையிலும் நீண்ட காலம் தயக்கமில்லாது வழுவழுப்பாகவே எழுதுகின்றன. ப்ளாட்டினம் பேனாக்கள் மிகவும் நாணயமான வியாபாரிகளிடமும் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

விலை ரூ. 3. I

வியாபார விபரங்களுக்கு கீழ்க்கண்ட பூரண உரிமையாளர்களுக்கு எழுதவும்:

மூல்லர் & பிப்ஸ் (இந்தியா) லிமிடெட்

குவீன்ஸ் மான்ஷன், பாஸ்டியன் ரோடு, பம்பாய்

# அபாயச் சங்கிலி

**எஸ். விஜயராகவன்**

பூனாவிலிருந்து பம்பாய்க்குச் செல்லும் 'டெக்கான் குவீன்' என்ற ரயில் வண்டி ஸ்டேஷனை விட்டுக் கிளம்புவதற்கு ஐந்தே நிமிஷந்தானிருந்தது. சற்று முன்னதாகவே வந்து உட்கார்ந்திருந்த என்னைத் தவிர வேறு ஒருவருமில்லை, நான் ஏறியிருந்த இரண்டாவது வகுப்பு வண்டியில்.

"பேசுவதற்குக் கூடத் துணை யாருமில்லையே!" என்று யோசித்தவாறு வெளியே பார்த்தவண்ணமிருந்தேன். நல்ல வேளையாக, ஒரு பெரியவர் வேகமாக நானிருந்த வண்டியை நோக்கி வந்து கொண்டிருந்தார். இன்னும் சற்றுத் தாமதித்திருந்தாரானால் அவருக்கு வண்டி கிடைத்திருக்காது. ஏனெனில், அவர் வண்டியில் கால் வைத்ததற்கும் வண்டி புறப்படுவதற்கும் சரியாயிருந்தது.

ஆரம்பத்திலேயே தனக்கே உரியதான அபார வேகத்தில் ஓடலானாள், 'தக்காண ராணி.' ரயில் போய்க் கொண்டிருக்கும் போதே உள்ளே நடந்தவண்ணம் எனக்கு எதிரே காலியாயிருந்த இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார், அப் பெரியவர். சற்றுப் பெரும் சரீரத்தைப் பெற்றிருந்த அவரை, மிகவும் வேகமாய் ஓடுகிற ரயில் நடக்கும்போது சற்றுத் தள்ளிவிட்டது. எனினும் சட்டென்று மேலே காணப்பட்ட ஓர் பலகை விளிம்பைப் பிடித்துக் கொண்டு தப்பித்துக் கொண்டார்.

"நல்ல வேளை! இன்னும் கொஞ்சம் மேலே பிடித்திருந்தீர்களேயானால், அபாயச் சங்கிலியையே இழுத்திருப்பீர்கள்!" என்றேன்.

"இழுத்தால் என்ன, ஸார்? அநேக சமயங்களில் அப்படி இழுத்தாலும் வண்டிகள் நிற்பதே யில்லை!" என்று சொல்லியவாறே அவர் என் எதிரே உட்கார்ந்தார்.

"அதென்ன அப்படிச் சொல்கிறீர்கள்? விளம்பரம் கூடப் போட்டிருக்கிறார்களே, 'வண்டியை நிறுத்தக் கைப்பிடியை இழு' என்று!"

"அதென்னவோ ஸார்! உங்களுக்கு இழுத்துப் பார்த்து அனுபவமில்லை போலிருக்கிறது. அது எப்படியிருந்தாலும், சங்கிலியை இழுத்தாலும் வண்டி நிற்காமலிருப்பது சிலருக்குச் சௌகரியம் தான்!" என்றார்.

"அதெப்படி?" என்று ஆச்சரியத்துடன் வினவினேன், நான்.

"ஒன்றுமில்லை; ஒரு சம்பவம் சொல்லுகிறேன், கேளுங்கள். நமக்கும் பொழுது போகும்" என்று ஆரம்பித்தார் அவர்.

## 1

மணக்குடி கிராமத்திலேயே மருதையைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அவன் இருக்கும் குடியானவத் தெருவிலும் சரி, மற்ற வேளாளர், செட்டிமார் தெருக்களிலும் சரி, யாவருக்கும் அவனிடம் நம்பிக்கையும் பிரியமும் உண்டு.

மருதை நல்ல இளங் காளை. தலையில் எப்பொழுதும் ஒரு முண்டாசு, உடம்பில் மெல்லிய கறுப்புத் துணியாலான முண்டா பனியன், நெற்றியில் சந்தனப் பொட்டு, இடையில் ஒரு கைலி வேஷ்டி, அதில் மேலாகச் செருகியிருக்கும் ஓர் அரிவாள்— இவற்றுடன் காட்சியளிப்பான் எப்போதும்.

தவிர மருதை ஒரு குஷிப் பேர்வழி. நாடோடிப் பாட்டுகள் பாடுவதிலும் சமர்த்தன். தெருவில் யாரேனும் இளம் பெண்களைப் பார்த்தால் அவரவர்களுக்கேற்றபடி ஒரு பாட்டுப் பாட ஆரம்பித்துவிடுவான். இதனால் இவன் எதிரில் வர எந்தக் குடியானவப் பெண்ணும் வெட்கப்படுவாள்.

அன்று தெருக் கோடியிலிருந்த அரச மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு, தனது அரிவாளைத் தீட்டிக் கொண்டிருந்தான்.

மருதை. அப்போது தலையில் புல்லுக் கட்டுடன் கடைக்காரக் காளிமுத்துவின் மகள் மங்களம் எதிரே வந்து கொண்டிருந்ததை அவன் பார்த்துவிட்டான். அவ்வளவுதான்; உடனே கத்தி தீட்டுவதை நிறுத்திவிட்டு,

"பச்சைப் புல்லுக் கூடைக்காரி,
பல சரக்குக் கடைக்காரி!
பார்த்து உன்னை ஏங்குறேனே
தங்கம் நில்லா லே!"

என்று பாட ஆரம்பித்துவிட்டான்!

சாதாரணமாகவே மங்களம் சற்றுத் துடுக்குக்காரி; ஒருவருக்கும் பயப்பட மாட்டாள்! ஆகவே, அவள் இன்னும் தைரியமாகவே கோபம் கொண்டவளாய்த் தலையிலிருந்த புல்லுக் கட்டைக் கீழே போட்டுவிட்டு, நிமிர்ந்து நோக்கினாள் மருதையை.

ஆனால் மறுகணம் அவளுடைய ஆத்திரமெல்லாம் எங்கேயோ பறந்து போய்விட்டது. அதற்குப் பதிலாக, ஏறு போன்ற நடையுடன் இடுப்பில் கத்தியைச் செருகிக் கொண்டே சிரித்த வண்ணம் அவளை நோக்கிவந்த மருதையைக் கண்டதும், ஏனோ வெட்கம் வந்து அவளைக் கவ்விக் கொண்டது.

"ஏ, மங்களம்! என்ன எம்பேருலே கோபமா? கொஞ்சம் கோவப்பழம் தின்னியோ?" என்று கேட்டான் மருதை.

உடனே இடி, இடி யென்று சிரித்துவிட்டதுடன், அவனை ஒரு மாயப் பார்வையும் பார்த்தாள் மங்களம். இதுவரை எவ்வளவோ பெண்களிடம் இதுபோல் தமாஷ் செய்துவிட்டுப் பேசாமல் நடையைக் கட்டியிருக்கிறான் மருதை. ஆனால் இன்று மங்களத்தின் மையல் ஊட்டும் பார்வை அவனை உலுக்கிவிட்டது. சொல்லொணாத இன்ப வேதனையால் துடித்தான் கணநேரம்.

பிறகு ஏதேதோ அவளிடம் பேசிப் பரிகாசம் செய்து கொண்டிருந்தான் மருதை. கடைசியில் அந்தப் புல்லுக் கட்டைத் தானே தூக்கி அவள் தலையில் வைத்து அனுப்பினான்.

இவ்விதம் எதிர்பாராத விதமாக இவ்விருவர்களிடையே ஏற்பட்ட புது நட்பு தூய மெய்யன்பில் முடிந்தது.

கடைக்காரக் காளிமுத்து பகல் சோற்றுக்கு வீட்டுக்குப் போகும் பொழுது மங்களம்தான் கடையில் இருப்பாள். அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு அடிக்கடி மங்களத்தைச் சந்தித்துப் பேசி வந்தான், மருதை.

நாட்கள் கழிந்தன. கடைக்காரக் காளிமுத்து மங்களத்தின் கல்யாணத்தைப் பற்றித் தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தான். இதற்குள் "மருதை — மங்களம்" இவர்களின் நட்பைப் பற்றி அறிந்திருந்த சிலர், காளிமுத்துவிடம் மருதைக்கே அவளைக் கல்யாணம் செய்து கொடுத்துவிடும்படி ஜாடையாகச் சொன்னார்கள்.

காளிமுத்துவுக்கும் அதில் இஷ்டம் தான். ஆனால் மங்களத்திற்குக் குமரன் என்று ஒரு மாமன் இருந்தான். எனவே அவனுடைய குல வழக்கப்படி அவனுக்குக் கட்டிக் கொடுக்காமல் எப்படி அன்னியனுக்குக் கொடுப்பது என்று தயங்கினான் காளிமுத்து.

இதே சமயத்தில், "நான் முறைக்காரன் இருக்கும்போது, அவன் மட்டும் பெண்ணை வெளியே கொடுக்கட்டும், சொல்றேன்!" என்ற குமரனின் மிரட்டுப் பேச்சும் காளிமுத்துவின் காதில் விழுந்தது. ஆகவே, குமரனுக்கே அவளைச் சமீபத்தில் கட்டிக் கொடுக்கப் போவதாக எல்லோரிடமும் சொன்னான் காளிமுத்து.

இதையறிந்த மருதையின் மனம் இடிந்துவிட்டது. அவனது பரிகாசப் பேச்சும், விளையாட்டும் அன்றே எங்கோ மறைந்துவிட்டன. ஒய்யார நடையுடன் அவன் தெரு சுற்றுவதும் நின்றுவிட்டது. அபூர்வமாக ஜனங்களின் கண்களில் பட்டான் அவன்.

மற்றும் சின்னாட்கள் கழிந்தன. ஒரு நாள் திடீரென்று மருதையை ஊரிலேயே காணவில்லை. அவன் பட்டாளத்தில் சேர்ந்துவிட்டதாகச் சிலர் சொல்லிக் கொண்டனர். சிலோனுக்குத் தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யப் போய்விட்டதாகச் சொல்லிக் கொண்டனர் சிலர். ஆனால் உண்மை விவரம் தெரியவே யில்லை. இப்படியே மற்றும் பல மாதங்கள் மறைந்தன.

## 2

இரவு பத்து மணியிருக்கும். கிருஷ்ண பட்சமாதலால் எங்கும் கும்மிருட்டு. ஆடுதுறை ஸ்டேஷனில், ஸ்டேஷன் மாஸ்டரையும், கொடி காட்டும் போர்ட்டரையும் தவிர வேறு ஒருவருமில்லை. அப்போது அங்கு வந்த திருச்சி பாஸஞ்சர், அந்த சிறு ஸ்டேஷனிலும் நிற்க வேண்டிய தன் விதியை நொந்து கொள்வதுபோல் நீண்ட பெருமூச்சுடன் நின்றது. ஆனால் ஒருவரும் இறங்கவும் இல்லை; ஏறவுமில்லை!

உடனே போர்ட்டர் மணி அடிக்கவே வண்டியும் நகர்ந்தது. அக் காரிருளில் ஒரு கரிய உருவம் ஓடிவந்து ஓடும் வண்டியில் ஏறிற்று.

அவ்வுருவம் ஏறிய வண்டியின் ஒரு மூலையில் கிழவி ஒருத்தி தூங்கிக் கொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் ஒரு நடுத்தர வயதுள்ள மனிதன் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவனை ஒட்டியவாறு ஒரு இளம் பெண் முகத்தைப் புடவைத் தலைப்பால் மூடியபடியே நித்திரையில் ஆழ்ந்திருந்தாள். மற்றபடி அவ்வண்டி முழுவதும் நிசப்தமாக யிருந்தது.

அவ் வண்டியில் ஏறிய உருவம் மெதுவாக முதலில் படுத்திருந்த பெண்ணண்டை சென்றது. அப்போது அவள் கழுத்தில் அணிந்திருந்த ஒரு பொன்னாலான மணிவடம் வெளியே தெரிந்தது. மறு கணம் அதை மெதுவாக அறுத்து இழுக்க முயன்றது அந்த உருவம்.

திடுமென்று விழித்துக் கொண்ட அப் பெண் 'ஓ' வென்று கத்திய வண்ணம் எழுந்தாள். மறு கணம் தாவி ஓடிய திருடன், எதிரே யிருந்த அபாயச் சங்கிலியைப் பிடித்து இழுத்தான். வண்டி நின்றதும் தப்பி ஓடிவிட வேண்டும் என்பது தான் அவனுடைய நோக்கம்.

ஆனால் வண்டி நிற்கவே யில்லை! அதற்குள் அத் திருடனை நன்றாகப் பார்த்து விட்ட அப் பெண், "மருதை!" என்றாள். தலையிலிருந்த துண்டை அகற்றி விட்டு, உடல் பதற, உள்ளம் நடுங்க, "மங்களமா?" என்ற வண்ணம் அருகில் வந்தான் அவன்.

"அதிருக்கட்டும்; எப்பொழுதிலிருந்து இந்தத் திருட்டுப் பிழைப்பு?"

"மங்களம்! உன்னைத்தான் என்னாலே அடைய முடியலே; அப்புறம் இந்த உலகத்திலே எனக்கு என்ன வேணும்? ஏதோ கால் போனபடி திரிஞ்சேன். அப்படியே யிருந்தா வயிற்றுப் பொளப்புக்கு ஏதாச்சும் வேண்டாமா? அதனாலேதான் இது! இப்படியே அகப்பட்டுக்கிட்டு ஜெயிலுக்குப் போனா சோத்துக் கவலையும் ஒளிஞ்சது யில்லையா?" என்று பரிதாபகரமாகப் பேசி முடித்தான் மருதை.

மங்களத்தின் கண்கள் நீரைக் கக்கின. அசைவற்று அவனையே உற்று நோக்கிய வண்ண மிருந்தாள்.

அதற்குள், "இது கிடக்கட்டும்; நீ என்னத்துக்கு மங்களம் அனேறே? உன்

புருஷன் சுகமா யிருக்கானா?" என்றான் மருதை.

"எனக்கு இன்னும் கண்ணாலமே ஆகலியே!" என்றாள் மங்களம்.

"உன்னைக் குமாரனுக்குக் கட்டிக் கொடுப்பதாகச் சொன்னானே, உங்க அப்பன்?"

"அப்படித்தான் சொல்லிச்சு முதல்லே! அனால் மாமன் குமரன் திடீர்னு பட்டாளத்தலே சேர்ந்துடிச்சு. அதனாலே எங்கப்பன் அவனுக்குக் கொடுக்கலே!"

இதைக் கேட்ட மருதையின் முகத்தில் திடீரென ஒரு பிரகாசம். அதற்குள் இவர்கள் பேச்சுக் குரலைக் கேட்ட காளிமுத்துவும் விழித்தெழுந்து, "யாரது?" என்று கேட்டான்.

"நான்தான் மருதை, மாமா!" என்று பதிலளித்தான், மருதை.

"மருதையா? எங்கே போயிட்டே இம்புட்டு நாளா? நல்ல வேளையாய்ப் போச்சு. நாங்கள் எல்லாம் மங்களத்துக்கு ஒரு மாப்பிள்ளை பார்க்கிறதுக்குத்தான் திருச்சிக்குப் போறோம். நீதான் வந்துட்டியே! இனிமே ஊருக்குத் திரும்பிப் போக வேண்டியதுதான்!" என்றான் காளிமுத்து.

"அபாயச் சங்கிலியை இழுத்து வண்டியை நிறுத்தட்டுமா, இப்படியே திரும்பி விடலாம்!" என்றாள் மங்களம், மருதையைக் கடைக் கண்ணால் நோக்கிச் சிரித்துக் கொண்டே.

மருதை அந்த அபாயச் சங்கிலியை நன்றியறிதலுடன் பார்த்தான். ஏனெனில், அவன் அதை இழுத்தபோது வண்டி நின்றிருந்தால், மங்களத்தை அறிந்து கொள்ளாமலேயே இறங்கி இருளில் மறைந்திருப்பா னல்லவா?

* * *

இவ்விதம் அவர் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே, 'தக்காண ராணி'யும் அவர் இறங்க வேண்டியதான 'லோணாவலா' ஸ்டேஷனை அடைந்து விட்டாள். அவரும் கதையை அத்துடன் நிறுத்திக் கொண்டு இறங்கிப் போய் விட்டார்.

வேறு என்னதான் இருக்கிறது, சொல்வதற்கு? அபாயச் சங்கிலி வேலை செய்யாததால் பிரிந்தவர் இருவரும் கூடி விட்டனர். இனி கல்யாணம்தானே?

---

# எதிர்பாராத விளம்பரம்!



தேங்காய் எண்ணெயைக் கள்ள மார்க்கெட்டில் விற்ற ராம்ஜி சேட் அவர்களை



போலீஸார் கோர்ட்டில் நிறுத்தி ரூ. 2000 அபராதம் போட்ட செய்தி




எல்லாப் பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப் பட்டதின் பலனாக,



ராம்ஜி சேட்டின் கடையில் கூட்டம் தாங்கவில்லை!

# கோழியும் பையன்களும்



ராஜி

ஒரு வீட்டில் ஒரு கோழி வளர்ந்து வந்தது. அது பார்வைக்கு மிகவும் அழகாக இருக்கும். அவ்வூரில் இருப்பவர்கள் அந்தக் கோழி வெளியில் உலாவும் பொழுதெல்லாம் அதைப் பார்த்து, "ஆகா! என்ன அழகான கோழி!" என்று சொல்லி ஆச்சரியப் படுவார்கள்.

கோழி வளர்ந்த வீட்டில் நான்கு பையன்கள் இருந்தார்கள். அவர்கள் கோழியின் மீது மிகவும் பிரியம் வைத்திருந்தார்கள். காலையில் எழுந்தவுடன் அந்தப் பையன்கள் கோழியைத் துரத்தி விளையாடுவார்கள்.

ஒரு நாள் பையன்களின் தகப்பனார் கோழியின் மீது மிகவும் கோபமாக இருந்தார். "இந்தக் கோழி நன்றாகத் தின்று வளருகிறதே தவிர, இதனால் ஒரு பிரயோஜனமுமில்லை. கொஞ்ச காலமாக இது முட்டை இடுவதே இல்லை. ஆகவே, நாம் முட்டைகளை விற்றுப் பணம் சம்பாதிக்கவும் முடிவதில்லை. இனசரி நம் கைக் காசைச் செலவழித்துத்தான் இதற்குத் தீனி போட வேண்டியிருக்கிறது. இப்படிப் பட்ட கோழியை இன்னும் வீணுக்கு வளர்த்துக் கொண்டிருப்பானேன்? நாளைய தினம் நிச்சயமாக இந்தக் கோழியை வேறு யாருக்காவது விற்று விட வேண்டியதுதான்!" என்று சொன்னார்.

உடனே பையன்களின் தாயாரும், "ஆமாம், இந்தக் கோழியினால் வர வர நமக்கு ஒரு பிரயோஜனமுமில்லை. முதலில் இதை விற்று விட்டு மறு காரியம் பார்க்க வேண்டும். எனது சிநேகிதி ஒருத்தி அடுத்த கிராமத்திலிருக்கிறாள். அவளிடம் சொல்லி, நாளைய தினமே வேறு யாருக்காவது இந்தக் கோழியை விற்று விட ஏற்பாடு செய்கிறேன்" என்றாள்.

தாயாரும் தகப்பனாரும் கோழியை விற்றுவிட வேண்டுமென்று தீர்மானித்ததைக் கேட்ட நான்கு பையன்களும் மிகவும் வருத்தப்பட்டார்கள். தங்களாலானவரை அவர்கள் தங்கள் தாயாரையும் தகப்பனாரையும் கோழியை விற்க வேண்டாமென்று எவ்வளவோ கெஞ்சிக் கேட்டுக் கொண்டார்கள். ஒன்றும் பிரயோஜனப்படவில்லை. கடைசியில் வேறு வழியின்றி, அவர்கள் மறுநாள் தங்களை விட்டுப் பிரியப் போகும் கோழியைப் பார்த்துக் கண்ணீர் விட்டார்கள்.

"ஏண்டா, இப்படி அழுவதைத் தவிர வேறு வழியே யில்லையா?" என்றான் ஒருவன்.

"எனக்கு ஒன்றும் தோன்றவில்லை!" என்றான் இன்னொருவன்.

"எனக்குந்தான் ஒன்றும் தோன்றவில்லை!" என்றான் மற்றவன்.

மூன்று பையன்களும் சேர்ந்து, அது வரை ஒன்றும் சொல்லாமல் நின்று கொண்டிருந்த நாலாவது பையனைப் பார்த்தார்கள். அவன் ஏதோ ஆழ்ந்த யோசனையில் இருந்தான்.



எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டு, "அப்படி என்னடா, யோசிக்கிறாய்?" என்று

கேட்டார்கள். அந்தக் கோழியைத் தங்கள் பெற்றோர் விற்காமலிருப்பதற்கு அவன் ஏதாவது ஒரு வழி சொல்லிக் கொடுக்க மாட்டானா என்ற ஆவல், அவர்கள் ஒவ்வொருவருடைய முகத்திலும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது.

நல்ல வேளையாக அவர்களுடைய ஆசை நிராசையாய்ப் போய் விடவில்லை. நாலாவது பையனுக்கு ஒரு நல்ல யோசனை தோன்றியது. அதை அவன் மற்ற மூவருக்கும் சொன்னான். அதைக் கேட்டு அவர்களும் சந்தோஷமடைந்து அப்படியே செய்வதென்று தீர்மானித்தார்கள்.

மறுநாட் காலை அவர்களுடைய தாயார் தன் கணவனிடம், "நீங்கள் கோழியை விற்க வேண்டாம். எதிர்பாராமல் இன்றைய தினத்திலிருந்து அது முட்டையிட ஆரம்பித்திருக்கிறது!" என்று சந்தோஷத்துடன் சொன்னாள்.

அதைக் கேட்ட பையன்களின் தகப்பனார் ஆச்சரியத்துடன், "முட்டை யிட்டிருக்கிறதா? எங்கே? எங்கே?" என்று கோழி இருக்கும் இடத்தை நோக்கி ஓடினார். நான்கு பையன்களும், "இனிமேல் கவலை இல்லை, கோழி முட்டை யிட்டு விட்டதாம்!" என்று சொல்லிக் கொண்டே, தாயார் தகப்பனாருடன் ஓடினார்கள்.

கோழி யிட்ட முட்டைகளைப் பார்த்த தகப்பனாருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "இது என்ன, இந்த முட்டை கோழி இட்ட முட்டை அல்லவே! வாத்து முட்டை மாதிரி அல்லவா இருக்கிறது? இது யார் செய்த வேலை?" என்று கோபத்துடன் இரைந்தார்.



உடனே தாயார், "நம்முடைய பையன்கள் செய்த வேலையாகத்தானிருக்கும். எங்கே கோழியை விற்று விடப்போகிறோமோ என்று பயந்து, கடைசியில் இந்த முட்டையை விலை கொடுத்து வாங்கி நமக்குத் தெரியாமல் வைத்திருக்க வேண்டும். வாங்கத்தான் வாங்கினார்களே, வாத்து முட்டை வாங்கி வைக்காமல் கோழி முட்டையாக வாங்கி வைத்திருக்கக் கூடாதோ?" என்றாள். அதைக் கேட்ட நான்கு பையன்களும் வெட்கத்தினால் தலை குனிந்தார்கள்.

அவர்களுடைய தாயாரும் தகப்பனாரும், "போனால் போகிறது, உங்களுக்காக அந்தக் கோழியை நாங்கள் விற்கவில்லை!" என்று சொன்னவுடன், நான்கு பையன்களும் சந்தோஷமாக உள்ளே ஓடினார்கள்.



# பத்திரிகை உலகில் புதிய ஜோதி!

சேலம், கோயமுத்தூர், நீலகிரி
வட ஆற்காடு, திருச்சி ஜில்லாக்களில்
வாசகர்களுக்குப் புதியதோர் தினப் பத்திரிகை

★

# "தினத் தாள்"

(நிர்வாக ஆசிரியர் : சி. ப. ஆதித்தன்)

**சேலத்தில் அச்சிட ஏற்பாடாகி யிருக்கிறது**

★

"தினத் தாளு"க்காக, ராய்ட்டர், ஏ. பி. செய்தி ஸ்தாபனங்கள் சேலத்தில் தனி ஆபீஸ்களைத் திறந்திருக்கிறார்கள். சென்னையில் அச்சிட்டு ரெயில் மார்க்கமாக வரும் தினப் பத்திரிகைகளைவிட, "தினத் தாள்", சேலம், கோயமுத்தூர் வட்டாரங்களில் அகில உலகச் செய்திகளையும் 24 மணி நேரம் முன்னதாகத் தரும் என்பதில் சந்தேகமில்லை.

★

## 12-5-47ல் வெளிவருகிறது

ஏஜென்ஸி வேண்டுவோர் எழுதுக

★

மானேஜர் :

## "தினத் தாள்" ஆபீஸ்

9, பிராட்வே, சென்னை — அல்லது — கிலன் ரோடு, சேலம்



# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

— ஆறாம் அத்தியாயம் —

## கடனும் கவலையும்

தயாநாதபாபு எவ்வளவுக் கெவ்வளவு உற்சாகத்துடன் பிள்ளையின் கல்யாணத்துக்குப் போனாரோ, அவ்வளவுக் கவ்வளவு உற்சாக மிழந்து வீடு திரும்பி வந்தார். தீனதயாளபாபு என்னவோ அவருக்குக் கை நிறையத்தான் பணம் கொடுத்தார். அவர் கொடுத்த அவ்வளவு ரூபாயும் ஆடல் பாடல்களிலும் கல்யாண விமரிசைகளிலுமாகக் கரைந்து விட்டது. கல்யாணம் முடிந்து வீட்டுக்கு வந்து ஆற அமர உட்கார்ந்து கொண்டு யோசித்துப் பார்க்கும் பொழுதுதான், "'தாம்தாம்' என்று கல்யாணத்தில் காசை எல்லாம் இப்படிக் கரியாக்கினோமே, இப்பொழுது என்ன செய்வது?" என்ற வருத்தம் அவருக்கு ஏற்பட்டது. 'ஒரு நாள் கூத்துக்கு மீசையை எடுத்து விட்டானாம்!' என்று சொல்லுவார்களே, அது போல நாமுதான் கல்யாணத்துக்கு இப்படிப் பணத்தை வாரி இறைத்தோமே! என்ன புருஷார்த்தத்தைக் கண்டு விட்டோம்? நாம் இப்படியெல்லாம் செலவழிக்காமல் இருந்திருந்தால் ஊரார் நம்மை 'சுத்தக் கருமி' என்று ஏசிக் காட்டி யிருப்பார்கள். ஏசினால் ஏசிவிட்டுப் போகட்டுமே! நம் உடம்பில் அது காய்த்தா தொங்கப் போகிறது? 'கல்யாணத்தில் வாண வேடிக்கை வைக்கிறேன்' என்று எந்தக் கடவுளுக்கும் நான் வேண்டிக் கொள்ள வில்லையே! இதெல்லாம் இந்த சமாவினால் வந்த வினை. அவன்தான் 'அது வேண்டும், இது வேண்டும்' என்று பிடிவாதம் பிடித்துச் செலவை ஏகமாக ஏற்றி விட்டான். மற்றவர்களையாவது இன்னும் நாலைந்து நாட்கள் பொறுத்துக் கொள்ளும்படிச் சொல்லிப் பார்க்கலாம். இந்த நகைக் கடைக்காரன் இருக்கிறானே, இவன் என்ன சொன்னாலும் காதில் வாங்கிக் கொள்ள மாட்டானே! காலகண்டன் மாதிரி கிட்டி கட்டியல்லவா நெரிப்பான்! கல்யாணம் முடிந்த ஏழு நாளைக்குள் பாக்கி ரூபாயைக் கொடுத்து விடுவதாக அல்லவா அவனிடம் பேச்சு! இதற்கு என்ன செய்வது?— என்ற சிந்தனை அவரை அல்லும் பகலும் வாட்டலாயிற்று.

ஏழாவது நாள் பொழுது விடிந்ததும் விடியாததுமாக நகைக் கடைக்காரன் வந்து விட்டான். ஆனால் அவர் பணத்துக்கு எங்கே போவார்? கூழைக் கும்பிடு போட்டு ஆளைச் சரிக் கட்டி அனுப்பும் வித்தையில் தயாநாதபாபு கைதேர்ந்தவர் அல்ல. அவர் இன்று அந்த வித்தையையும் கையாண்டு பார்த்து விட்டார். கடையில் தவணை தவணையாக ஆறு மாதத்தில் கணக்கைத் தீர்த்து விடுவதாகச் சொல்லிப் பார்த்தார். அப்புறம் மூன்று மாதத்துக்கு இறங்கி வந்தார். ஆனால் நகைக் கடைக்காரன் விடுபவனாயில்லை. பணம்

கொடுக்க விட்டால் மூன்று நாளில் பாக்கி ரூபாய்க்குள்ள நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடுவது என்று சொன்ன பிறகுதான் அவன் ஆளை விட்டான். 'நல்ல வேளை! இந்த மட்டோடாவது ஆளை விட்டானே! தலை தப்பினது தம்பிரான் புண்ணியம்' என்று தம் மனதைத் திடப்படுத்திக் கொண்டார். அந்த மூன்றாவது நாள் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் வந்து விட்டது. தயாராத பாபுவுக்குத் தம் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு வழியும் புரியவில்லை. எப்பொழுது பார்த்தாலும் தலையில் கையை வைத்துக் கொண்டு இதைப்பற்றியே சிந்திக்கலானார். உலகம் தெரிந்த பேர்வழியா யிருந்தால் இதற்கெல்லாம் கவலைப்படவே மாட்டான். எவ்வளவோ சாக்குப் போக்குச் சொல்லி, கடைக்காரன் காலைத் தேய்த்திருப்பான். காலுக்கு விளக்கெண்ணெய் போட்டுக் கொள்ளும்படி கூடச் செய்திருப்பான். ஆனால் தயாராத பாபு இந்த விஷயத்தில் தேர்ச்சியே பெறாதவர். என்ன செய்வார், பாவம்! அவருக்கு யோசனையில் ஆழ்ந்திருப்பதைத் தவிர வேறு வழியே புரியவில்லை.

ஜாகேசவரி அவருடைய அறைக்குள் நுழைந்து, "சாதம் ஆறி அவலாகப் போகிறதே, சாப்பாட்டை முடித்துக் கொண்டு உங்கள் யோசனைக்கு உட்காருவதுதானே?" என்றாள்.

தூக்க முடியாத சுமையைத் தலையில் தூக்கமாட்டாமல் தூக்கிக் கொண்டு நிற்கும் ஒருவன் வெகு சிரமப்பட்டுத் தலை நிமிர்ந்து பார்ப்பானே, அதேபோல் தயாராத பாபு வெகு சிரமத்துடன் தலையை நிமிர்த்தி, "நீங்கள் எல்லாரும் சாப்பிடுங்கள். எனக்காகக் காத்திருக்க வேண்டாம். எனக்குப் பசியே இல்லை!" என்றார்.

"என்ன, பசி யில்லையா? நேற்று ராத்திரிகூட நீங்கள் சாப்பிடவில்லை, பசி இல்லை என்கிறீர்களே?...... ஆமாம், இப்படிப் பட்டினி இருப்பதனால் கடைக்காரனுக்குக் கொடுக்க வேண்டிய கடன் அடைந்து விடும் என்று எண்ணுகிறீர்களா, என்ன?" என்று கேட்டாள் ஜாகேசவரி.



"அவனுக்கு என்ன பதில் சொல்லுவது என்று புரியவே யில்லை. யோசனை மூளையைக் கலக்குகிறது. நன்றாக மூளை கெட்டுப் போய்ப் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து வைத்தேன்! ஆமாம்... மாட்டுப் பெண் ஏதாவது சில நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடுவாளோ?"

"உங்கள் மாட்டுப் பெண்ணினுடைய குணம் தெரிந்திருந்தும் நீங்கள் இப்படிக் கேட்கிறீர்களே, நான் என்னவென்று சொல்வது? சந்திரஹாரம் பண்ணிப் போட்டால்தான் பாக்கி நகைகளையும் போட்டுக் கொள்ளுவேன் என்று அவள் ஒரே முரட்டுப் பிடிவாதம் பிடிக்கிறாள். எல்லா நகைகளையும் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்திருக்கிறாளே தவிர, அவள் போட்டுக் கொள்ளவே இல்லை. அப்படியிருக்கும்போது அவளிடமிருந்து எதையாவது வாங்கிவிட முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவள் கழுத்திலே அந்தப் போலிச் சந்திரஹாரம் ஒன்றுதான் தொங்கிக் கொண்டிருக்கிறது; வேறொன்றுமே இல்லை. என்ன பிடிவாதம்! எவ்வளவோ மாட்டுப் பெண்களை நானும்தான் பார்த்திருக்கிறேன், ஆனால் இந்த மாதிரிப் பெண்ணை நான் என் ஜன்மத்திலே பார்த்ததில்லை. நல்ல மாட்டுப் பெண் நமக்கு வந்து வாய்த்திருக்கிறது! அது எக்கேடாவது கெட்டுப் போகட்டும், என்ன இருந்தாலும் நேற்றைக்கு வந்த மாட்டுப் பெண்ணினிடத்தி லிருந்து செய்து போட்ட நகையைக் கேட்டுப் பிடுங்கிக் கொள்ளுகிறது என்றால் நன்றாயிருக்குமா? நீங்களே சொல்லுங்கள்" என்றாள் ஜாகேசவரி.



தயாராத பாபு கோபத்தில் எரிந்து விழுந்து கொண்டு, "எதற்காக எரிகிற கொள்ளியில் என்னையை விடுகிறாய்! 'நன்றா யிருக்குமா?' என்று கேட்பவன் ஆயிரம் ரூபாயை எங்கே யிருந்தாவது கொண்டு வாயேன், பார்ப்போம். எனக்கும் தான் நகையைக் கேட்பது சரியாகப் பட வில்லை. ஆனால் வேறு வழி? 'உடும்பு வேண்டாம், கையை விட்டால் போதும்' என்றல்லவா இருக்கிறது!" என்றார்.

"ஆமாம், நீங்கள் பேசும் பேச்சைப் பார்த்தால், 'உங்கள் பிள்ளையாண்டான் கல்யாணமே செய்து கொள்ளாமல், காலாடியாக ஊர் சுற்றட்டும்' என்று சொல்வதுபோல் அல்லவா படுகிறது! கல்யாணம் என்றால் எல்லாரும்தான் கடன் வாங்கிச் செல வழிக்கிறார்கள். நீங்கள் மட்டும் ஒன்றும் புதிதாகக் கடன் வாங்கிச் செலவழித்து விட வில்லை. உப்பைக் கொட்டி, புளியைக் கொட்டி நான் உங்கள் குடும்பத்தை ஒன்றும் கடன்படச் செய்துவிட வில்லை. 'புத்தியுள்ள பிள்ளையாய் இருந்தால் தானாகப் பிழைத்துக் கொள்ளும்' என்பார்களே, அப்படிப் பிழைக்க உங்களுக்கு வழி தெரிந்திருக்க வேண்டும்! இப்பொழுது எவ்வளவு மூட்டிக் கொண்டால்தான் என்ன பிரயோசனம்? அடுத்த தெரு சத்திய தேவர் உங்களைவிட ஒன்றும் அதிகமாகச் சம்பளம் வாங்கிவிட வில்லை. அப்படி யிருந்தும் அவர் என்னடா வென்றால் சொந்த வீடு கட்டிவிட்டார். நிலம் வேறு வாங்கிவிட்டார். பாங்கில் வேறு பணம் போட்டு வைத்திருக்கிறாராம். பெண் கல்யாணத்துக்குக் குறைந்தது ஐயாயிரம் ரூபாய் செலவழித்திருக்க மாட்டாரா? இதற்கெல்லாம் அவருக்குப் பணம் எங்கிருந்து வந்தது? தருமம் நியாயம் என்று பார்த்துக் கொண்டே யிருந்தால் இப்படித்தான் திண்டாட வேண்டி வரும். 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்!' என்று தெரியாமலா பெரியவர்கள் சொல்லி யிருக்கிறார்கள்?"

"அவன் கெட்ட வழியில் சம்பாதித்தான். அதனால் அவனுடைய இரண்டு பிள்ளைகளும் போய்விட்டதுகள்!"

"சாவும் பிறப்பும் உலகத்துக்கு ஒன்றும் புதிதில்லை. வாங்குகிறவனும் சாகிறான்; வாங்காதவனும் சாகத்தான் சாகிறான். நீங்கள் மனம் வைத்தால் ஆறு மாதத்திலே எல்லாக் கடனையும் தீர்த்துவிடலாம்."

தயாநாத பாபு புருவத்தை நெரித்துக் கொண்டு, "சிவ, சிவா! இன்று வரைக்கும் அந்த மாதிரிக் காரியம் நான் செய்யவே யில்லை. இன்னும் இருக்கிற கொஞ்ச நாட்களையும் அது மாதிரி எப்படியாவது தள்ளி விட்டால் போதும். சாகப் போகிற காலத்திலே அந்தப் பாவத்தை வேறு சுமக்க வேண்டுமா?......நான் சொல்லுவதைக் கேள். மாட்டுப் பெண்ணிடம் ஒன்றையும் ஒளிக்காமல் மறைக்காமல் சொல்லி விடு. இதை யெல்லாம் எவ்வளவு நாள்தான் மூடி மூடி வைத்துக் கொள்ள முடியும்? இன்றைக்கு இல்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் தெரியத்தானே போகிறது? நாலு நாளைக்குப் பின்னால் தெரியப் போவது, நாலு நாளைக்கு முன்னால் தெரிந்தால் நல்லதே தவிரக் கெடுதல் இல்லை. இரண்டு மூன்று நகைகளைத் திருப்பிக் கொடுத்து விடும்படி அவளிடம் சொல்லிப் பாரேன்!" என்றார்.

ஜானகேசுவரிக்குக் கோபம் கோபமாக வந்தது. "அதெல்லாம் என்னால் முடியாது. நீங்களே வேண்டுமானால் சொல்லிக் கொள்ளுங்கள்" என்றாள்.

இவ்வாறு அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருந்த பொழுது, கையில் டென்னிஸ் ராக்கெட்டுடன் வெளியில் போயிருந்த ரமாநாத் உள்ளே நுழைந்தான். வண்ணான் மடிப்புக் கலையாத தும்பைப் பூப் போன்ற துல்லியமான டென்னிஸ் காலர் ஷர்ட்டு, 'வெள்ளை வெளேர்' என்ற கால் சட்டை, கான்வாஸ் செருப்பு முதலியன அணிந்திருந்தான் அவன். அவனுடைய சிவப்பு நிறமும் முகக் களையும் அவனை ஒரு பெரிய வீட்டு 'மைனர்' என்று ஞாபகப்படுத்துவது போலிருந்தன. மற்றொரு கையில் கைக் குட்டையும், சாதி முல்லைப் பூச் செண்டும் இருந்தன. முல்லைப் பூவின் வாசனை 'கம்' மென்று வீசிக் கொண்டிருந்தது. அப்பா - அம்மாவுக்குத் தெரியாமல் மாடிக்குப் போய்விட வேண்டும் என்ற எண்ணத்தில் வெகு வேகமாக அவன் மாடிப்படியில் காலை வைத்தான். ஜானகேசுவரி அவனைக் கவனித்து விட்டாள். "எல்லாம் இந்தப் பிள்ளையாண்டானால் வந்த வினைதான்! இவனே இதற்கும் ஒரு வழி சொல்லட்டும்......ரமா, இங்கே வா! ஆடல் பாடலில் கொண்டு போய் ஆயிரம் ரூபாயைக் கொட்டிக் கரியாக்கினாயே! அப்படிக் கரியாக்காமல் இருந்தால் நகைக் கடைக்காரனுக்காவது கொடுத்திருக்கலாமோ, இல்லையோ? இப்பொழுது அவனுக்கு எப்படிப் பணம் கொடுப்பது? அவன் 'பணம் கொடுத்தால்தான் ஆயிற்று' என்று கிட்டி கட்டி நெரிக்கிறான். கடைசியில் வெகு சிரமப்பட்டு 'பாக்கித் தொகைக்குள்ள நகையைத் திருப்பிக் கொடுத்து விடுகிறோம்' என்று சரிகட்டி வைத்திருக்கிறோம். ஆனால் மாட்டுப் பெண்ணிடம் போய் நகையைக் கொடு என்று எப்படிக் கேட்பது? எல்லாம் உன்னால் வந்த வினைதான்!" என்றாள்.

ரமாநாத் இந்தக் குற்றச் சாட்டைத் தன்மீது ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. "நானா செலவு செய்தேன்? நன்றாயிருக்கிறதே, நீ சொல்லுவது? என்னிடம் செய்யச் சொன்ன செலவைச் செய்தேனே தவிர வேறொன்றும் அடாபிடியாகச் செய்துவிடவில்லை" என்றான்.

ரமாநாத் சொன்னதிலும் உண்மையில்லாமல் போகவில்லை. தயாநாதபாபு 'அதெல்லாம் கூடாது' என்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தாரானால் அவனால் செய்திருக்க முடியுமா? செய்ததெல்லாம் அவரைக் கேட்டுக் கொண்டு தானே அவன் செய்தான்? மேலும் ரமாநாத் மீது குற்றஞ் சாட்டுவதனால் இப்பொழுது வந்துள்ள கஷ்டம் தீர்ந்துவிடப் போகிறதா?

"நான் உன்மீது குற்றஞ் சாட்டவில்லையப்பா! செய்ததெல்லாம் நான்தான். இப்பொழுது வந்திருக்கும் கஷ்டத்திலிருந்து நாம் எப்படியாவது தப்பியாகவேண்டுமே, அதற்கு என்ன செய்வது? கடைக்காரனோ விடா முண்டன். நாளைக் காலை அவனுடைய ஆள் எம கிங்கரன் மாதிரி வந்து நின்று விடுவான். அவனுக்கு என்ன பதில் சொல்லுவது? பாக்கி பணத்துக்குள்ள நகைகளைத் திருப்பிக் கொடுப்பதைத் தவிர எனக்கு வேறு வழியே புலப்படவில்லை. நகைகளைத் திருப்பிக் கொடுப்பதும் சிரமம்தான். அவள் ஒத்துக்கொள்ள வேண்டாமா? இருபது இருபத்தி ஐந்து ரூபாய் அதிகப் பெறுமான மூன்று நகைகளைக் கொடுத்து விட்டால் தொல்லை ஒழிந்துவிடும் என்று எண்ணுகிறேன். உன் அபிப்பிராயம் என்ன?" என்று வினயமாகக் கேட்டார் தயாநாதபாபு.

ரமாநாத் வெட்கத்துடன், "என்னைக் கேட்டால் எனக்கென்ன தெரியும்? நீங்கள் சொல்லுவது நியாயமாகத்தான்

படுகிறது. நகைகளைத் திருப்பிக் கொடுக்க அவன் சம்மதிக்க வேண்டாமா? பரிசத்தின் பொழுது நாம் சந்திரஹாரம் செய்து போடாமல் இருந்தது அவருக்குப் பிடிக்கவே யில்லை. அம்மாவுக்குக் கூட இந்த விஷயம் தெரியும். சந்திரஹாரம் பண்ணிப் போட்டால்தான் மற்ற நகைகளையும் போட்டுக் கொள்ளுவேன் என்று அவள் பிடிவாதமாயிருக்கிறாள்!'' என்றான்.

ஜானகீவரிக்குத் தன் கட்சியைப் பிள்ளை எடுத்துப் பேசுவதைக் கண்டதும் பக்கபலம் கிடைத்தது. ''நானும் இவரிடம் இத்தனை நாழிகையாக இதைத்தான் சொல்லிக் கொண்டிருக்கிறேன்!'' என்றாள்.

''நாம் அவளைத் 'திருப்பிப்'பொன்று 'நகைகளைக் கொடு' என்று கேட்டால் நம் வீட்டு ரகசியங்கள் அம்பலத்துக்கு வந்துவிடும். எதற்கும் யோசிக்காமல் திடீரென்று ஒன்றும் செய்துவிடக் கூடாது!'' என்றான் ரமாநாத்.

தயாநாதபாபு நெற்றியை சுளித்துக் கொண்டு, ''அவளிடம் என்ன ரகசியம் வேண்டிக் கிடக்கிறது? நம் வீட்டு உண்மை நிலைமையை அவள் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் தெரிந்து கொள்ளுகிறாளோ, அவ்வளவுக் கவ்வளவு நல்லது!'' என்றார்.

ரமாநாத் தன் குடும்பத்தைப் பற்றி, வாலிபர்களுக்கு இயற்கையாகவே உண்டான சுபாவப்படி, பத்மாவிடம், ''நிலபுலன் நிறைய இருக்கிறது. அதன் மூலம் ஆயிரக் கணக்காக வரும்படி வருகிறது. பாங்கியில் நிறைய ரூபாய் வேறு இருக்கிறது. அதன் மூலம் நல்ல வட்டி வேறு கிடைக்கிறது!'' என்றெல்லாம் பெருமையாகச் சொல்லி வைத்திருந்தான். இப்பொழுது பத்மாவிடம் போய் நகைகளில் சிலவற்றைத் திருப்பிக் கொடு என்று கேட்டால் அவள் அவனைப் பற்றி என்ன நினைப்பாள்!

''நீங்கள் சொல்லுவது நியாயந்தான். என்ன இருந்தாலும் இப்பொழுதே தெரிந்து விட்டால் நம்மை அவள் ரொம்பத் தாழ்மையாக எண்ணி விடுவாள். அதோடு நிற்காது. அவள் தன் அப்பா, அம்மாவுக்கு வேறு கடிதம் எழுதி விடுவாள். நமக்குத் தான் அவமானம். அதனால்தான் யோசிக்கிறேன்.''

''நமக்கென்ன அவமானம்? 'நான் லக்ஷாதிப் பிரபு' என்று அவர்களிடம் பீற்றிக் கொள்ளவில்லை. அந்தக் கவலை உனக்கு வேண்டாம்.''

''எனக்கு அந்தக் கவலை வேண்டாம் தான். உங்களுக்குக் கொஞ்சம் முன் யோசனை இருந்திருக்க வேண்டும். 'இந்தக் கல்யாண காலத்துக்கு மட்டும் நான் வட்டிக்கு நகை வாங்கி மாட்டுப் பெண்ணுக்குப் போட்டிருக்கிறேன். நாலு நாளைக் கெல்லாம் அதைத் திருப்பிக் கொடுத்து விடுவேன்' என்று நீங்கள் அப்பொழுதே




கணவர்:—இரண்டு கப் டீ கொண்டு வா! எனக்கும் ஒரு கப் வேணும்!
மனைவி:—அவன்தான் பரீட்சைக்குப் படிக்கிறான், தூங்காமல் இருப்பதற்கு டீ குடிக்கிறான்! உங்களுக்கு எதற்கு?
கணவர்:—அவன் தூங்காமல் இருக்கிறானா என்று பார்த்துண்டு இருக்க வேண்டாமா? அதற்காகத்தான் நானும் டீ குடித்துவிட்டு உட்கார்ந்திருக்கப் போகிறேன்!

அவர்களிடம் சொல்லியிருந்தால், இப்பொழுது இந்தக் கவலைக்கு அவசியமே நேரிட்டிராதே! அன்றைக்கு மட்டும் உங்களுக்கு ஏன்தான் இப்படித் தற்பெருமை அடித்துக் கொள்ள வேண்டும் என்று தோன்றிற்றோ?" என்றான் ரமாநாத்.

தயாநாத பாபுவின் உள்ளத்தில் ரமாநாத்தின் வார்த்தைகள் அம்புபோல் 'சுரீர்' என்று தைத்தன. இருந்தாலும் அவனுடைய வார்த்தைகளைப் பொருட்படுத்தாமல், "அவனிடமிருந்து நகைகளைக் கேட்டு வாங்காமல் கடனைத் தீர்க்க முடியாது போலிருக்கிறதே! என்ன செய்வது? காலைக்குள் ஒரு வழி செய்தாக வேண்டுமே!" என்றார் வருத்தத்துடன்.

ரமாநாத் ஒன்றும் சொல்ல முடியாமல் வாய் அடைத்து நின்றான். ஜாகேச்வரி, "ஏதாவது சாக்குச் சொல்லி அவனிடமிருந்து நகைகளை வாங்கித்தான் ஆக வேண்டும். வேறு வழியில்லை. யாராவது இரண்டு நாளைக்கு இரவல் கேட்கிறார்கள் என்று சொல்லிக் கேட்டுப் பார்ப்போமா? கேட்டு 'இரவல் கொடுக்க முடியாது' என்று அவன் சொல்லி விட்டால்?.....அப்படியே கொடுத்து விடுகிறான் என்றே வைத்துக் கொள்ளுவோம். நாலைந்து நாள் கழித்து அவனிடம் திருப்பி ஒப்படைத்தாக வேண்டுமே? அதற்கு என்ன செய்வது?" என்றாள்.

தயாநாத பாபு "ஆமாம், எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அப்படிச் செய்தால் என்ன? எப்படியாவது அவனிடமிருந்து நகைகளைக் கேட்டு இப்பொழுது வாங்கிக் கொண்டு, அப்புறம் அதற்குப் பதிலாகக் 'கில்ட்' நகைகளை வாங்கிக் கொடுத்து விட்டால் போகிறது?" என்றார்.

ஆனால் அடுத்த கணமே 'அப்படிச் செய்வது தப்பு' என்று அவருக்குப் பட்டது. "அப்படியெல்லாம் செய்யக் கூடாது. 'கில்ட்' அழிந்து விட்டால் நம் 'குட்டு' வெளிப்பட்டு விடும். தலை நிமிர்ந்து பேச வழியிராது...... வேறு ஏதாவது யோசனை ஓடினால்தானே? 'நமது கஷ்டத்தை அவனுக்குச் சொல்லி விடுவதுதான் உத்தமம்' என்று எனக்குத் தோன்றுகிறது. முதலில் கேட்கும்பொழுது அவனுக்குக் கொஞ்சம் மனவருத்தம் ஏற்படத்தான் செய்யும். ஆனால் பின்னால் போகப் போக அது சரியாய்ப் போய்விடும்" என்று தமக்குத் தாமே ஆட்சேபத்தையும் தெரிவித்துக் கொண்டார் அவர். (தொடரும்)



## காலக்ஷேபம்

### நல்ல கருணை!

பிரமுகர் (வண்டியில் போய்க்கொண்டே):- ஏன் அப்பா, வண்டி வேகமாகப் போகவில்லையே! எனக்கு நேரம் ஆகிறதே!

வண்டிக்காரன்:—அவசரமாய்ப் போய்ச் சேர வேண்டுமா? கிழ மாடு, அதனால் கொஞ்சம் மெதுவாகத்தான் நடக்கிறதுங்க!

பிரமுகர்:—நான் ஜீவகாருண்ய சங்கத்திற்குத் தலைமை வகிக்க வேண்டும். நேரம் ஆகிவிட்டது. கொஞ்சம் தார் போட்டு மாட்டை வேகமாக ஓட்டேன்!

—க. ரங்கராஜன்.



### ஓஹோ, அப்படியா!

பெரியவர்:—பாலு! பரீக்ஷைக்குப் படிக்கிறாயா?

பையன்:—நன்றாகப் படிக்கிறேன், மாமா! வாயெல்லாம் கூட வலிக்கிறது!

பெரியவர்:—ஏண்டா அப்படிப் படிக்கிறாய்? உடம்பை ரொம்ப அலட்டிக்காதே!

பையன்:—வாசிச்சதனாலே வாய் வலிக்கலே மாமா, கொட்டாவி விட்டுத்தான் வலிக்கிறது!

—ஆர். முத்துசாமி.



### வலி நீங்கும்!

பாட்டி:—ஏண்டா! உடம்பு, முதுகெல்லாம் வலி எடுக்கிறதென்று நேற்று ராத்திரி முனகிக் கொண்டிருந்தாயே, இன்னிக்கு ஆபீஸுக்குப் போகா விட்டால் என்ன?

பேரன்:—இல்லே பாட்டி. இந்த ஆபீஸ் டயத்திலே, பஸ்ஸிலே ஏறிப் போனா, எந்த வலியாயிருந்தாலும் பஞ்சாய்ப் பறந்து போகும். —ஆர். எம்.



### நியாயந்தான்!

ஹோட்டல் முதலாளி:—ஏதுக்கடி, நீ வேறு சமையல் பண்ணுகிறாய்? நம்ம ஓட்டல்லே இருந்தே எடுத்துண்டா போதாதோ?

மனைவி:—நீங்க வியாபாரத்துக்கென்று வைத்திருப்பதை நான் சாப்பிட்டு விட்டு, நாளைக்கு உடம்புக்கு வந்தால் யார் பார்க்கிறது! —ஆர். ஸ்ரீநிவாசன்.



### அவர் வேலை!

மானேஜர்:—என்னய்யா இது, விளையாட்டாயிருக்கு? 'ஹெட் கிளார்க் வேலையை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்' என்று அவரை லீவிலே அனுப்பி விட்டு, வேலை ஒன்றும் செய்யாமல் தூங்கி வழிகிறீரே!

உதவி குமாஸ்தா:—இல்லே சார், இப்பொழுது நான் பார்ப்பது அவருடைய வேலையைத்தான், ஸார்! —ஆர். என்.




"ஓவல்டின்" நோய்க்குப் பின் சீக்கிரத்தில் ஆரோக்கியத்தையும் வலுவையும் திரும்பப் பெறச் செய்யக்கூடிய சரியான ஆகாரசத்து அளிப்பதால், அதன் மிகவும் உத்தமமான மதிப்பையும் அவசியத்தையும், எல்லா இடங்களிலும் உள்ள டாக்டர்களும் நர்ஸுகளும் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

"ஓவல்டின்" னின் விரும்பத்தக்க சுறுமணமானது நோயாளிகளின் ருசி உணரும் சக்தி குறைந்த வாய்க்கு நன்றும் ஒத்துக்கொள்வதாயும் ப்ரியமானதாயும் இருக்கிறது. ஓவல்டின் சுலபமாகவும் பூரணமாகவும் கொடுக்கும் முறைப்படி நன்கு கட்டிச் சத்தாக்கப்பட்ட ஆகாரம், எளிதில் ஜீரணிக்கப்பட்டு தேகத்தில் சேர்க்கப்படக்கூடியதாய் இருப்பதால் நோய்க்குப்பின் உடம்பின் தேவைக்கு மிகவும் ஏற்றதாக இருக்கிறது.

"ஓவல்டின்" சிறந்த பரிபூர்ணமான உணவு வேண்டிய போஷணைகளை மறுபடி திரும்பக் கொடுக்கவல்ல ஆகாரசத்தானது அதில் சேர்ந்துள்ள பழுத்த பார்லிமால்ட்டிலிருந்தும், புதிய ஏடுடன் கூடிய பசுவின் பாலிலிருந்தும், மற்றும் தேகத்திற்கும் மூளைக்கும் நரம்புகளுக்கும் வளர்ச்சி கொடுத்து பாதுகாக்க வல்ல விட்டமின்களிலிருந்தும், இதர மூலவஸ்துக்களிலிருந்தும் கிடைக்கிறது. போலிகளை விலக்குங்கள்

எல்லா மருந்து வியாபாரிகளிடமும், ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

விநியோகஸ்தர்கள்: — கிரஹாம்ஸ் டிரேடிங் கோ (இந்தியா) லிட்., த. பெ. நெ. 1205. மதராஸ்: பம்பாயிலும், கராச்சி கல்கத்தாவிலும்:

தி இங்கிலீஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிவ் ஹோல்சேல் சொஸைடி லிட்., கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

**'ஓவல்டின்'**

'OVALTINE பலவிருத்தி ஆகார பானம்'

OV/102

# மறக்காத நெஞ்சம்

**கி. ரங்கராஜன்**

"பாப்பா!" என்று கூப்பிட்டான் சுந்தரமூர்த்தி.

பதிலில்லை.

மறுபடியும் "பாப்பா!" என்றான்.

ஐந்து நிமிஷமாயிற்று; பாப்பா வரவில்லை. ஆனால் ராஜேஸ்வரி அம்மாள், பாப்பாவுக்குப் பதிலாக அங்கே தோன்றினாள்.

"உன்னைக் கூப்பிட்டேனே, காதில் விழவில்லையா?' என்று சொல்லிக் கொண்டே அவளை ஏறிட்டுப் பார்த்தான் சுந்தரமூர்த்தி.

"என்னையா கூப்பிட்டீர்கள்? 'பாப்பா' என்று யாரையோ வல்லவா கூப்பிட்டீர்கள்?"

"பாப்பா என்றா கூப்பிட்டேன்?" என்று சொல்லி அவளை நோக்கினான். அப்பொழுது அவன் கண்களில் நீர் மல்கியது.

"பாப்பா என்பது யார்? என்னை எதற்கு அவ்விதம் கூப்பிட வேண்டும்? என் பெயர் ராஜேஸ்வரி அல்லவோ?"

"ஆம், உன் பெயர் ராஜேஸ்வரிதான்! என்னமோ உன்னைப் பார்க்கும்போது அவள் ஞாபகம் வந்துவிடுகிறது. இனிமேல் அப்படிக் கூப்பிடவில்லை."

"என்னை எப்படி வேண்டுமானாலும் கூப்பிட்டுக் கொள்ளுங்கள். இஷ்டமிருந்தால் கேட்கிறேன்; இல்லாவிட்டால் பேசாமல் இருந்து விடுகிறேன். அதிருக்கட்டும், உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். சந்தர்ப்பம் வந்தபோது சொல்லிவிட வேண்டு மல்லவா?"

"என்ன, சொல்லேன்!"

"சில சமயங்களில் என்னிடம் நீங்கள் இரண்டு வார்த்தை பேசும்போது உங்கள் கண்களில் நீர் நிரம்பி விடுகிறது. அன்றொரு நாள் நான் ஸ்வாமி படத்துக்குப் பூமாலை சாத்திவிட்டுச் சிறிது எடுத்து என் தலையில் செருகிக் கொண்டேன். மாடியினின்றும் இறங்கி வந்த நீங்கள் சற்று நேரம் என்னைப் பார்த்துவிட்டுப் பிறகு அழுதுவிட்டீர்கள். அழுவதற்காகவா என்னைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்? காப்பி கொடுக்க வந்தால் அழுகை, சாதம் போட்டால் அழுகை, தலை பின்னிக்கொண்டால் அழுகை, வீணையை எடுத்து இரண்டு பாட்டுப் பாடினால் அழுகை! இப்படிச் சதா அழுது கொண்டிருப்பது எனக்குப் பிடிக்கவில்லை. ஏன்? என்னை உங்களுக்குப் பிடிக்கவில்லையா?"

"அசடே! உன்னைப் பிடிக்கவில்லை என்று நான் சொன்னேனா? உன்னைப் பார்க்கும்போது, நீ பேசிச் சிரிக்கும்போது அவள் நினைவு வந்துவிடுகிறது. அதனால் சிறிது மன வருத்தம் உண்டாகி யிருக்கும். இனிமேல் ஜாக்கிரதையாக இருந்து கொள்கிறேன்!"

"ஒரு வார்த்தை கேட்கிறேன். அவளை நினைத்து இப்படி உருகுகிறீர்களே, அவள் என்னைவிட அழகியா? அல்லது குணத்தினால் உயர்ந்தவளா?"

"அவள் அழகிலேயும் குணத்திலேயும் உன்னைவிட உயர்ந்தவள் என்று நான் சொல்லமாட்டேன். ஆனால், மகா உத்தமி. அவளைப் பிரிந்து நான் பட்ட பாடு அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். காலம் கொஞ்சம் கொஞ்சமாய் என் துக்கத்தை மாற்றிற்று. அவளை மறந்தும் விட்டேன். உன்னைச் சந்தித்த நாள் முதல், உன்னை விவாகம் செய்துகொண்ட நாள் முதல், அவள் ஞாபகம் இடை யிடையே வந்து என்னை வருத்துகிறது. நான் என்ன செய்யட்டும்?"

"அவள் இறந்துபோய் எத்தனை வருஷமாகிறது?"

"சரியாக ஐந்து வருஷமாகிறது. ஒரு வருஷ வாழ்வில் அவள் ரூப சௌந்தர்யமும் குண சௌந்தர்யமும் என்னைப் பயித்தியம் பிடிக்கச் செய்துவிட்டன!"

"அவள் இறந்தது எதனால்?"

"தீராத வயிற்று வலியினால் கஷ்டப்பட்டாள். செய்யாத வைத்தியம் இல்லை. ஒரு வருஷம் இரவு பகல் என்று பாராமல் அவளுடன் கஷ்டப்பட்டேன். முடிவில் பிரயோஜனம் ஒன்று மில்லாமற் போய் விட்டது."

"வயிற்று நோயினால்தான் இறந்தாளா?"

"ஆம், அதையெல்லாம் எதற்காக இப்பொழுது கிளப்புகிறாய்?"

"வயிற்று நோயினால் துன்புற்றாள் என்பது சரி; ஆனால் அவள் அதனால் இறக்கவில்லையாமே?"

சுந்தரமூர்த்தி திடுக்கிட்டவனாய், "பின் எதனால் இறந்தாளாம்?" என்று கேட்டான்.

"அவள் சாவுக்குக் காரணம் நீங்கள் என்று சொல்கிறார்களே?"

"நானா! யார் அப்படிச் சொன்னது? பரம விரோதிகூட அவளுக்குத் துன்பம் செய்ய மாட்டானே! உயிருக்குயிராக உள்ள நானா அப்படிச் செய்வேன்?"

"வீண் மிரட்டல் எல்லாம் வேண்டாம். அவள் உயிர் துறந்தது உங்களால்தான் என்பது எனக்கு நன்றாகத் தெரியும்."

சுந்தரமூர்த்தி விலவிலத்துப் போய் "உனக்கு யார் இதெல்லாம் சொன்னது?" என்று கேட்டான்.

"யாரா யிருந்தால் என்ன? உண்மையை மறைக்க முடியுமா?"

"உண்மையை நான் எதற்காக மறைக்க வேண்டும்? நிச்சயமாக அவள் பிரிவுக்கு நான் சிறிதளவேனும் காரணமல்ல."

"உங்கள் நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்கள். உங்கள் மூத்த மனைவியின் நோயைக் குறித்து நீங்கள் நண்பர் ஒருவருக்குக் கடிதம் எழுதின ஞாபகம் இருக்கிறதா?"

"மேலே சொன்னால், சொல்லுகிறேன்."

"உங்கள் நண்பர்களில் பலர், உங்கள் மூத்த மனைவி உயிருடன் இருக்கும் போதே, மீண்டும் உங்களை விவாகம் செய்து கொள்ளச் சொல்லி உங்களை வற்புறுத்தவில்லையா?"

"இருக்கலாம்; இதெல்லாம் அனுமானத்தால் சொல்லக் கூடியதுதானே?"

"வந்து விட்டேன், அவசரப் படாதீர்கள். அந்த நண்பர்களில் மிகவும் அந்தரங்கமான ஒருவருக்கு, பாப்பா தவறிப்போன பின்பு நினைக்கவேண்டிய ஒன்றை இப்பொழுதே நினைக்க அஞ்சுகின்றேன் என்று நீங்கள் எழுதவில்லையா?"

சுந்தரமூர்த்திக்குத் தலை சுழன்றது. சற்று நேரம் கழித்து மெதுவாக, "ராஜேஸ்வரி! உனக்கு யார் இதெல்லாம் சொன்னது?" என்று கேட்டான்.

"அவரைப் பற்றி உங்களிடம் எதற்காகச் சொல்ல வேண்டும்? தபாலில் போட வேண்டிய அந்தக் கடிதத்தை மறந்து போய் உங்கள் சட்டைப் பையில் வைத்து விட்டீர்கள். உங்கள் மனைவி அதைப் பார்த்து விட்டாள். நான் இருப்பது உங்கள் இன்ப வாழ்வுக்கு இடையூறாக இருப்பதை அறிந்து கொண்ட அவள், காவேரியில் மூழ்கி இறந்து விட்டாள்! என்ன, நான் சொல்வது சரிதானே?"

சுந்தரமூர்த்தி அப்படியே அயர்ந்து போய் உட்கார்ந்து விட்டான்.

"ராஜேஸ்வரி, அவள் இறந்து போக வேண்டும், நான் மீண்டும் ஒரு இளம் பெண்ணை மணக்கவேண்டும் என்று கருதியவனல்ல. என்னமோ விதி அவ்விதம் செய்து விட்டது. மீண்டும் உன்னைக் கேட்கிறேன். இந்த விவரம் எல்லாம் யார் உனக்குச் சொன்னது?"

"யாராயிருந்தால் என்ன? உங்கள் மூத்த மனைவியேதான் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!"

"பாப்பாவா சொன்னாள்? அவளை உனக்குத் தெரியுமா? அவளை எப்பொழுது நீ சந்தித்தாய்?"

"அவளைச் சந்திப்பதென்ன! அவள் இப்பொழுது உயிரோடுதான் இருக்கிறாள்!"



"உயிரோடு இருக்கிறாளா? விளையாடுகிறாயா?"

"உங்களிடம் நான் எதற்கு விளையாட வேண்டும்? அவள் உயிரோடுதான் இருக்கிறாள்!"

"அப்படியானால் நான் அவளைப் பார்க்க வேண்டும். என் உடல் பதறுகிறது!"

"சரி, அவளைப் பார்ப்பதாகவே இருக்கட்டும். பார்த்த பின்பு என்ன செய்ய உத்தேசம்?"

"உத்தேசம் என்ன? அவளையும் அழைத்து வர வேண்டியதுதான்!"

"எங்கோ, கெட்டலைந்து போனவளையா?"

"உன் நாக்கை அலம்பு! அவளைக் குறை கூறினால் நாக்கு அழுகிவிடும் — அது கிடக்கட்டும், அவள் எந்த ஊரில் இருக்கிறாள்?"

"இதே ஊரில்தானிருக்கிறாள். இதே தெருவில்தான் இருக்கிறாள் என்று கூடக் கேள்வி!"

சுந்தரமூர்த்தி வெறி பிடித்தவன் போல் வாசலுக்கு ஓடினான். அவனைக் கட்டிப் பிடித்து உட்கார வைத்துவிட்டு, ராஜேஸ்வரி மீண்டும் தொடர்ந்து பேசினாள்: "நீங்கள் கூப்பிட்டால் அவள் வர மாட்டாள். என்னை நீங்கள் விவாகம் செய்து கொண்டதும் அவளுக்குத் தெரியும். உங்கள் முகத்தில்கூட அவள் இனிமேல் விழிக்க மாட்டாள். நீங்கள் அவளைத் தேடிச் சென்றால் நிச்சயமாக மற்றொரு முறை அவள் தற்கொலை செய்து கொள்ளத் துணிவாள். ஆகையினால் அந்த எண்ணத்தை விட்டுவிடுங்கள். நீங்களாகப் போவதை விட அவளே இங்கு வருமாறு செய்து விட்டால்......?"

"அவள் இங்கே வருவாளா?"

"வரவழைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே அவன் பாதங்களில் வீழ்ந்து, "என்னைத் தெரியவில்லையா? நான்தான் பாப்பா என்கிற ராஜேஸ்வரி!" என்று கூப்பிய கைகளுடன் எழுந்து நின்றாள்.

அப்பொழுது சுந்தரமூர்த்திக்கு ஏற்பட்ட பல்வேறு உணர்ச்சிகளையும் விவரிப்பது என்பது இயலாத காரியம்.

அரை மணி நேரம் பேச்சு மூச்சற்று மெய் மறந்து போனான். கடைசியாக, "கண்ணே! நீ எப்படிப் பிழைத்து என்னை மீண்டும் அடைந்தாய்?" என்று கேட்டான்.

"ஸ்ரீரங்கம் காவேரியில் விழுந்து உயிர் துறக்கத் துணிந்த நான், ஆற்றில் மூழ்கி இரண்டு வாய் ஜலமும் குடித்த பிறகு, எனக்கு நீந்தத் தெரியுமாதலால் எப்படியோ இரண்டு மைல்களுக்கு அப்பாலுள்ள ஓர் ஊரில் கரை ஏறினேன். அது உறையூர் என்று பிறகு தெரிந்தது. என்னுடைய நகைகளில் ஒன்றை விற்றுத் திருச்சிராப்பள்ளியிலே ஒரு வீட்டில் சிறிது காலம் வசித்தேன். பின்பு தங்களைக் காண என் உள்ளம் விழைந்தது. ஆனால் அந்த ஆசையை அடக்கிக் கொண்டேன். இதற்கிடையில் ஸ்ரீரங்கம் பள்ளிக்கூடத்தில் ஒரு உபாத்தியாயினி வேலை காலியாயிருப்பதாகத் தெரிந்து, அதற்கு மனுச் செய்து கொண்டேன். தாயுமானவர் அருளால் அப்பதவி எனக்குக் கிடைத்தது. நாலைந்து வருஷம் உபாத்தியாயினியாக இருந்து விட்டேன். பத்திரிகை ஒன்றில் தங்கள் கையொப்பமிட்ட 'மணமகள் தேவை' என்ற விண்ணப்பத்துக்கு எனது படத்தை அனுப்பினேன். விதி நம்மை ஒன்றாக்கியது. அன்று தாங்கள் என்னைப் பார்க்க வந்தபொழுது, எங்கே என்னைக் கண்டு கொள்வீர்களோ என்று பயந்தேன். நல்ல வேளையாக உங்களுக்கு ஏற்பட்டிருந்த சித்தப்பிரமையின் காரணமாக இன்றுவரை என்னை நீங்கள் தெரிந்து கொள்ளவில்லை. என்னை மன்னிக்க வேண்டும்" என்று சொல்லி விட்டு, அடிபட்ட புறாவைப்போல் அவனது மடியில் விழுந்து விம்மினாள்.

"பாப்பா, எழுந்திரு!" என்று பரம வாத்ஸல்யத்துடன் அவளது முகத்தைத் தூக்கித் தனது முகத்துடன் ஒற்றிக் கொண்டான் சுந்தரமூர்த்தி.

* * *

அன்றிரவு நிலா வெளிச்சத்தில், மேன்மாடியில் பாப்பா என்கிற ராஜேஸ்வரி வீணையை எடுத்து மீட்டி,

"வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்
இந்தஇப் பிறவிக் கிரு மாதரை
சிந்தையாலும் தொடேன் என்ற செவ்வரம்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்"

என்ற கம்பராமாயணப் பாடலைத் தேவகானம் போலப் பாடினாள்.

அதனைப் பருகி ஆனந்த வெள்ளத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்த சுந்தரமூர்த்தி, "இந்தப் பாட்டுத்தானே, அன்று நான் உன்னைப் பார்க்க வந்தபோது நீ பாடிக் கொண்டிருந்த பாட்டு?" என்று கேட்டான்.

"ஆம்" என்றாள் ஸ்ரீமதி பாப்பா.




# விடார்

## எலெட்ரிக் குக்கர்

✦ செலவு குறைவு ✦ சிக்கனம்

✦ இனிமேல் அடுப்பு மூட்டும் கவலையேயில்லை!

வெர்னன் அண்டு கம்பெனி லிட்.,

போர்பிஸ் போர்பிஸ் காம்பெல் எஜென்ஸி.

# படிக்கப் பார்!

## India's Charter of Freedom

[Director of Publicity. Constituent Assembly of India. Council House, New Delhi. *Price*: 8 as.]

எதிர்கால இந்திய அரசியலை வகுப்பதற்காகச் சென்ற வருஷக் கடைசியில் டில்லியில் அரசியல் நிர்ணய சபை கூடியது எல்லோருக்கும் தெரியும். மேற்படி மகா சபைக் கூட்டத்தில், பண்டித நேரு தாம் கொண்டு வந்த புகழ் பெற்ற 'லட்சியத் தீர்மான'த்தை விளக்கி இரு அற்புதமான-மகா அற்புதமான பிரசங்கங்கள் செய்தார்.

மேற்படி இலட்சியத் தீர்மானமும் நேருஜீ செய்த பிரசங்கங்களும் இந் நூலில் அடங்கியிருக்கின்றன. நல்ல தாளில், அழகாக வெளியிட்டு ஆங்கிலம் தெரிந்த யாரும் படித்துப் பயன் பெறும் வண்ணம் விலை எட்டணாவாக வைத்திருக்கிறார்கள்.

## கவிதைக் கதம்பம்

[ஆசிரியர்: "ஜீவன்." கிடைக்கும் இடம்: இந்திரா நிலையம், புதுவயல், இராமநாதபுரம் ஜில்லா; விலை: ரூ. 1-6-0.]

வாத்தியாரின் 'கைப்பிரம்பு' முதல் சாலையோரத்தில் உள்ள 'ஆலமரம்' வரை பல விஷயங்களைப் பற்றி எழுதப்பட்ட கவிதைகள் இப் புத்தகத்தில் அடங்கியிருக்கின்றன.

ஏழை ஆரம்பப் பள்ளிக்கூட ஆசிரியர்களுடைய நிலைமையை விளக்கும் "அன்னுவியின் அலுவல் அனுபவம்" என்ற கவிதை முதல் தரம். தேசிங்கு ராஜனுடைய கதையின் ஒரு பகுதியை ஆசிரியர் புதிய முறையில் இயற்றியிருப்பது பாராட்டத்தக்க முயற்சியாகும். இதில் உள்ள தனிப் பாடல்கள் பலவற்றைக் குழந்தைகள் பெரிதும் ரசிப்பார்கள். பொதுவாக, எல்லாப் பாடல்களுமே ரொம்ப எளிய நடையில் எல்லாருக்கும் புரியத்தக்க முறையில் ஹாஸ்யமாகவும் சுவாரஸ்யமாகவும் அமைந்திருக்கின்றன.

"ஜீவன்" என்ற புனை பெயரில் மறைந்திருக்கும் இந்த இளம் கவிஞருக்குத் தமிழ்நாடு நல்ல ஆதரவளிக்கும் என்று கருதுகிறோம்.

## கற்பகக் கனிகள்

[ஆசிரியர்: கலி; பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், பாலக்கரை, திருச்சி; விலை: ரூ. 2-8-0.]

கதையின் மூலம் வாசகர்களின் சிந்தனையைக் கிளற முடியும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ஏன் என்றால் சில கதைகளின் ஆரம்பத்திலேயே முடிவும் தெரிந்துவிடுகிறது. அப்பொழுது சிந்தனைக்கு வேலையில்லை. ஆனால் சிறந்த கட்டுரையின் மூலம் வாசகர்களின் சிந்தனையைக் கிளற முடியும் என்பது மட்டுமல்ல; கட்டுரை நன்றாக அமையா விட்டால் அவர்களுடைய கோபத்தையும் கிளற முடியு மல்லவா?

கற்பகக் கனிகள் நமது சிந்தனையைக் கிளறுவதோடு ஹாஸ்ய உணர்ச்சியையும் கிளறி விடுகின்றன. ஆனால் கோபத்தைக் கிளறவில்லை யென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## செல்வம் (இரண்டாம் பதிப்பு)

[ஆசிரியர்: க. சந்தானம்; பிரசுரம்: சக்தி காரியாலயம், சென்னை: விலை: ரூ. 1—8—0.]

"..........சர்க்கார் ஜனங்களிடம் வரிகள் எதற்காக வசூலிக்கிறார்கள்? கடன் என்னத்துக்காக வாங்குகிறார்கள்? இவை யெல்லாம் வெள்ளி ரூபாயாகக் கொடுக்க வேண்டும் என்கிற நியதியாவது இருக்கிறதா? நோட்டாகக்கொடுத்தாலும் வாங்கிக்கொள்ள வேண்டியதுதானே? அந்த நோட்டை வேண்டும் என்கிற வரையில் அவர்களே அச்சடித்துக் கொள்வதற்கு என்ன?...... இந்த மாதிரி எத்தனையோ கேள்விகளுக்கு, இந்தப் புத்தகத்தில் ஸ்ரீ க. சந்தானம் பதில் சொல்லியிருக்கிறார்" என்று இந்நூலின் முன்னுரையில் "கல்கி" கூறுகிறார்.

சிந்தனையைத் தூண்டி அறிவை வளர்க்கும் இந்நூல் இரண்டாம் பதிப்பு என்ன, இன்னும் எத்தனையோ பதிப்புகள் வெளிவர வேண்டும்.

## சித்திரமடல்

[காளமேகப் புலவர் இயற்றியது: பதிப்பாசிரியர்: பெ. தூரன்; பிரசுரம்: புதுமலர் நிலையம், கோயமுத்தூர்: விலை: ரூ. 1—8—0.]

கட்டழகு வாய்ந்த தலைவியை ஒரு சோலையில் சந்தித்த தலைவன் காதல் கொள்ளுகிறான். நாணம் மிகுந்த தலைவியும் அவனைக் காதலிக்கிறாள். பகிரங்கமாகத் தங்கள் காதல் நாடகத்தை அரங்கேற்ற முடியாததற்கு அவர்கள் வருந்துகிறார்கள். அப்பொழுது தலைவன் மடலேறுவதே சிறந்த வழியெனத் துணிகிறான். அதாவது பனைமடலாற் செய்த குதிரையில் ஏறி நாற்சந்தியில் நின்று தன் உள்ளக் காதலின் வேகத்தைத் தலைவன் வலியுறுத்திக் தலைவியை மணப்பான்.

மடலேறுதல் என்னும் இத்துறை அகப்பொருள் இலக்கியங்களில் உன்னத ஸ்தானம் பெற்றுவிட்டது. காளமேகப் புலவர் இயற்றிய இந்நூல் சொல் அழகும் பொருள் ஆழமும் பெற்று விளங்குகிறது.

ஏட்டுப் பிரதியிலிருந்து பெயர்த்து எழுதி அரும்பத உரையுடன் இந்நூலை வெளியிடுவதில் ஸ்ரீ பெ. தூரன் எவ்வளவு தூரம் சிரமம் எடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதைப் புஸ்தகத்தைப் படிப்பவர்கள் நன்குணர்வார்கள்.

## வரப்பெற்றோம்

1. சர்வஜித் வருஷத்திய குமரன் பஞ்சாங்கம். கணித்தவர்கள்: ஸ்ரீ சிவராமன், ஸ்ரீ சி. ஏ. சாமி; பிரசுரம்: குமார விகடன் காரியாலயம், காஞ்சீபுரம். விலை: அணா 5.

2. சர்வஜித் வருஷத்திய பாஸ்கர பஞ்சாங்கம். கணித்தவர்: பண்டித K. V. S. வெங்கடேச ஐயர்; கிடைக்கும் இடம்: பாஸ்கர ஜோதிஷ நிலையம், வடக்கு வீதி, கரூர்; விலை: அணா 6.

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்

★

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் ரூ. 71,10,900
செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 51,67,608
ரிசர்வ் நிதி ரூ. 61,50,000

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி



# ஜேஸனில் தீட்டி க்ஷவரம்
செய்து கொள்வது தனி இன்பம்

ஜேஸன் ஸேப்டி ரேஸர் பிளேட் ஸ்டிராப்

முதலாவதாக புதிய பிளேடை இன்னும் சிறப்பாக்குகிறது: இரண்டாவதாக இந்த ஸ்டிராப்பை சரியான முறையில் கையாண்டால், ஒரே பிளேடை காலவரையின்றி உபயோகிக்கலாம்.




## ஜேஸன் ஸ்டிராப்
சுத்தமான அழுத்தமான
தோலால் ஆனது

சென்னை மாகாணம், மைசூர், திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை சமஸ்தானங்களுக்கு ஏஜண்டுகள்:

கார்டன் வுட்ராப் & கம்பெனி
(சென்னை) லிமிடெட்
தபால் பெட்டி நெ. 42, சென்னை

பங்களூர், கொச்சி, கோயமுத்தூர், மதுரை, பெஜவாடா, விசாகப்பட்டணம்

DJK 31. TM.

